# கல்கி

பூடான் மன்னருக்கு என்ன பிரச்னை?



KALKI 8.12.91 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு



## இந்திய கிரிக்கெட்:
# திடீர் வெற்றிகளும் படுதோல்விகளும்!

# இலவசம்!

# பக்தி புத்தகங்கள்



இலவச பக்திப் புத்தகங்கள்
எங்களிடம் ஒரே தடவை-
யில் ரூ. 250-க்கு மேற்ப்
பட்ட ஸ்வீட், காரம் வாங்கு
பவர்களுக்கு வாங்கும்
தொகையை அனுசரித்து
பக்திப் புத்தகங்கள்
இலவசமாக வழங்கப்படும்.

---

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2-வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020.
போன்: 412557



டங்நோவா - அந்நிய மொழியில் எழுதப்பட்ட பெயருடன்.

# ஆயுதக் கலாசாரம்: உலகளாவிய வியாபாரம்!

சென்ற மாதம் 6-ஆம் தேதி மாலை. அலைகளின் தாலாட்டில் அந்தச் சிறு கப்பல், இலங்கையின் வட பகுதியான வெட்டலகேணியை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. பார்ப்பதற்கு ஏதோ பழைய கப்பல் போலத் தோற்றமளித்தாலும், நவீன தகவல் தொடர்புச் சாதனங்கள் உள்பட சகல வசதிகளும் கொண்ட கப்பல் அது. ''நமக்காகப் படகுகளை அனுப்பியிருப்பார்கள். இரவுக்குள், சென்று விட வேண்டும்'' என்று இன்ஜினியர் சிவத்தம்பியிடம் கப்பலின் மாஸ்டர் பாலன் சொல்லிக் கொண்டிருந்தான். அந்த கப்பலின் பின்னால் சிறு படகு ஒன்றும் இணைக்கப்பட்டிருந்தது.

விசாகப்பட்டினம். கிழக்கு பிராந்திய கடற்படைத் தலைமையகம். ''காரைக்காலில் இருந்து பத்து கடல் மைல்கள் தூரத்தில் சந்தேகத்துக்கிடமான முறையில் ஒரு கப்பல் சென்று கொண்டிருக்கிறது'' என்று ஒயர்லஸ்ஸில் ரகசியத் தகவல் ஒன்று வருகிறது. உடனே செயல்படுகிறது கடற்படை.

''சரக்கெல்லாம் தயாரா இருக்குதில்ல?'' - கேட்டுக் கொண்டே வானத்தைப் பார்த்தான் பாலன். உடம்பெல்லாம் ஷாக் அடித்தது. இந்திய கடற்படையைச் சேர்ந்த 'டோர்னியர்' குட்டி விமானம் கப்பலை நோக்கி வந்து கொண்டிருந்தது.

''டேய் பொடியன்களா! உடனே கப்பலைத் திருப்பி, அறுபது மைல் தாண்டி, சர்வதேசக் கடல் எல்லைக்குப் போய் விடுங்க. அப்போதுதான் நமக்கு ஆபத்திருக்காது'' - அலறினான் பாலன். சகல என்ஜின்களும் வேலை செய்யக் கப்பல் ''பறக்க'' ஆரம்பித்தது.

இதற்கிடையில் மேலே டோர்னியரிலிருந்து ஒயர்லஸ்ஸில் கேள்வி மேல் கேள்வி கேட்கப்பட, பதில் கப்சிப். டோர்னியர், தலைமையகத்துக்குத் தகவல் அனுப்ப, வங்காள விரிகுடாவில் ரோந்துப் பணியைப் பார்த்துக் கொண்டிருந்த ஐ.என்.எஸ். சரயுவின் காப்டன் ரமேஷ் ரெட்டிக்கு ''அந்தக் கப்பலை விரட்டிப் பிடியுங்கள்'' என்று ஆணை வந்தது. பணியில் இறங்கினார் ரெட்டி. 32 மணி நேரத்துக்குப் பிறகு அந்தக் கப்பல் இந்திய கடற்படையின் கட்டுப்பாட்டில் வந்தது.

இதுதான் சமீபத்தில் பிடிக்கப்பட்ட விடுதலைப் புலிகளின் ஆயுதக் கப்பல் 'டங்நோவா'வின் கதை. கடற்படையினர், பிடிபட்ட கப்பலைச் சென்னைக்குக் கொண்டு

மாஸ்டர் பாலன் : உதவியாளர் சிவம்.



வரும்போதே இணைக்கப்பட்டிருந்த சிறு படகு கடலில் மூழ்கிப் போனதாகச் சொல்கிறார்கள். அந்தச் சிறு படகில் ஏராளமான ஆயுதங்கள் இருந்தனவாம். கடற்படையினரின் துப்பாக்கிச் சூட்டில் ஓட்டையானதால் படகு மூழ்கிப் போனது என்றும் ஒரு தகவல் சொல்கிறது. பிடிபட்ட கப்பலில், வெடிகுண்டுகள் தயாரிப்பதற்குத் தேவையான ரசாயனங்கள், பாட்டரிகள் பெட்ரோல், டீசல் என்று ஏகப்பட்ட பொருள்கள்.

☛ பிடிபட்டதில் தலைகுனிவு



இவ்வளவு கடுமையான நடவடிக்கைகளுக்குப் பிறகும் புலிகள் தைரியமாகச் செயல்படுகிறார்களே! அது எப்படி? இந்தியாவுடன் புலிகளுக்கு உறவு நன்றாக இருந்த போது ஆயுதங்களை இங்கு பத்திரப் படுத்திக் கொண்டு (கடற்கரை மணலில் புதைத்து பத்திரப்படுத்தி வைக்கப்பட்ட செய்திகள் நாம் அறிந்தவைதானே!) சிறிது சிறிதாகப் போர் முனைக்கு எடுத்துச் சென்றார்கள். ஆனால் இப்போது?

''1986-ல் இருந்து பார்த்தால் எந்த நேரத்திலும் அவர்களுக்கு ஆயுத சப்ளை தடையானதாகத் தெரியவில்லை. ஏன், இந்திய அமைதிப் படையுடன் யுத்தம் செய்து கொண்டிருந்த போது கூட அவர்களுக்கு ஆயுத சப்ளை வந்து கொண்டேதான் இருந்தது'' என்கிறார் புலனாய்வுத் துறை அதிகாரி ஒருவர். இதற்குக் காரணம் சர்வதேச ஆயுத வியாபாரிகளின் தொடர்ச்சியான சப்ளைதான்.

கஷோக்கி என்ற பெயர்தான் பத்திரிகைகளில் அடிக்கடி அடிபடுகிறதே; சர்வதேச ஆயுத வியாபாரி இவர். பாலஸ்தீன விடுதலை இயக்கத்துக்காகட்டும், தென் அமெரிக்க போதைப் பொருள் வியாபாரிகளுக்காகட்டும், நிகராகுவா புரட்சியாளர்களுக்காகட்டும்; இலங்கைப் புலிகளாகட்டும் - யாருக்கு ஆயுதம் வேண்டுமோ அவர்களுக்குத் தேவையான ஆயுதங்களைப் பெற்றுத் தருவதுதான் கஷோக்கியின் வேலை. இவரைப் போன்ற ஆயுத வியாபாரிகள் உலகில் பலர் உண்டு. சைனா, ஸ்வீடன், போலந்து, தென் கொரியா மற்றும் பல நாடுகளில் தனியார் ஆயுத உற்பத்தி ஜாம், ஜாமென்று நடக் கிறது. இந்தக் கம்பெனிகளின் பிரதிநிதிகள் உலகெங்கிலும் பரவிக் கிடக்கிறார்கள். உதாரணமாக சைனாவின் நார்த் இண்டஸ்ட்ரீஸ்' கார்ப்பரேஷனுக்கு எழுநூறுக்கும் மேற்பட்ட விற்பனைப் பிரதிநிதிகள் இருக்கிறார்கள். ஆயுத வியாபாரிகளுடன் தொடர்பு கொண்டிருக்கிறார்கள்.

சட்டபூர்வமாக ஆயுதங்கள் கொண்டு செல்ல முடியாத இடங்களுக்கும் ரகசியமாக அனுப்பி வைக்கும் கலை சர்வதேச ஆயுத வியாபாரிகளுக்கு உண்டு. உதாரணமாக, சைனாவிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு ஆயுதங்கள் வர வேண்டும் என்று வைத்துக் கொள்ளுங்கள்... ஹாங்காங் வழியாக, பாங்காக் வந்து விடும் சரக்கு. பின்னர் சிறு சிறு படகுகளில் அந்த ஆயுதங்கள், சர்வதேச எல்லையில் சுற்றிக் கொண்டிருக்கும் புலிகளின் கப்பலுக்கு அனுப்பப்படும். அந்த கப்பல் ஆயுதங்களைப் பெற்றுக் கொண்டு இலங்கையின் வடக்குப் பகுதியை நோக்கி விரையும். ஆனால் இலங்கையின் கடல் எல்லைக்குள் நுழையாது. சர்வதேச எல்லையிலேயே நிற்கும். ஏற்கெனவே கொடுத்துள்ள சிக்னல்களின்படி, புலிகளின் படகுகள் விரைந்து வரும். நடுக் கடலிலேயே, ஆயுதங்களைப் படகுகளுக்கு இறக்கி விட்டுக் கப்பல் விரைந்து விடும். அப்புறம் கரைக்குக் கொண்டு சேர்ப்பது புலிகளின் பாடு.

இதுபோன்ற கப்பல்கள் வருடக்கணக்கில் கரைகளைப் பார்க்காமல் கடலிலேயே சுற்றிக் கொண்டிருக்கும். ''டங்நோவா, போன்று இன்னமும் மூன்று கப்பல்கள்' புலிகளுக்கான ஆயுத சப்ளையில் இறங்கியிருக்கின்றன. இதில் ஒரு கப்பல் கிரீஸ் நாட்டுக்கருகேயும் மற்ற இரண்டு கப்பல்கள் சிங்கப்பூர் அருகேயும் சுற்றுவதாகத் தகவல்கள் கூறுகின்றன!

சர்வதேச அளவில் ஆயுதம் விற்பவர்களுக்கும் வாங்குபவர்களுக்கும் தகவல் தொடர்பு மிகவும் முக்கியம். உலகின்




1., 2. விடுதலைப் புலிகள் ஆயுதங்கள் பெற்ற இடங்கள்

3. இந்திய எல்லை அருகே தென்பட்ட இடம்.

பொது மொழிகளில் அவர்கள் பேசிக் கொள்வதில்லை. உதாரணமாக 'நாய் கடித்து விட்டது' என்று சொன்னால், 'ஆயுதக் கப்பல் மாட்டிக் கொண்டது' என்று பொருள் கொள்ளப்படும். இந்த ரகசிய சங்கேத வார்த்தைகளுக்கெல்லாம் அகராதிகள் இருக்கின்றன. ஒரு குழு உபயோகிக்கும் சங்கேத வார்த்தையை மற்றொரு குழு அறியாது. உற்பத்தியாளனோ, அவன் ஏஜெண்டோ, வாங்குபவன் முகத்தைப் பார்க்கும் சந்தர்ப்பமே கிடையாது என்பதால் இந்த சங்கேத வார்த்தைகள் முக்கியத்துவம் பெறுகின்றன. மேலும் இடையில் யாராவது 'கோல்மால்' செய்து விடாமல் தடுக்கிறது. இந்த ரகசிய தகவல் பரிமாற்றம். பல மொழிகளின் கலவையாக இந்த சங்கேத பாஷை இருக்கும். எங்கேயாவது மாட்டிக் கொண்டால் சங்கேத வார்த்தைகள் கொண்ட பேப்பர்களையும், அகராதிகளையும் உடனே அழித்து விடுவார்கள். பின்னர் புதியதாக சங்கேத பாஷை கண்டுபிடிக்கப்படும்.

சிங்கப்பூர் ஒரு சுதந்திர வியாபாரத் தலம் என்பதால், தனியார் ஆயுத உற்பத்தியாளர்களுக்கு, மிகக் கொண்டாட்டமாகி விடுகிறது. பெரிய, பெரிய கண்டெய்னர்களில், உள்ளூர் ஏஜெண்டுகளின் பெயருக்கு, கனரக யந்திரங்கள், கம்ப்யூட்டர் சாதனங்கள் என்றெல்லாம் பார்சல்கள் வருகின்றன. பிரித்தால் ஆயுதங்களை அடையாளம் காணலாம். சத்தம் போடாமல் (!) அவை படகுகளில் ஏற்றப்பட்டு பழகிப் போன கடற்பாதையில் கொண்டு செல்லப்படுகின்றன.

“புலிகளுக்குச் சர்வதேச ஆயுத மார்க்கெட்டில் தொடர்பை உண்டாக்கிக் கொடுத்தவரே ஒரு போலீஸ் அதிகாரி'' என்று அதிர்ச்சி தரும் குண்டைப் போடுகிறார் புலனாய்வுத் துறை அதிகாரி ஒருவர். ''புலிகளோடு, நமது அரசியல்வாதிகள் ஒட்டி உறவாடும் போது, அவர்கள் செய்த கைங்கர்யம்'' என்ற அவர், தொடர்ந்து, ''நமது அரசியல்வாதிகள் வசதிக்கு ஏற்ப, அவ்வப்போது கொள்கைகளை மாற்றிக் கொள்வதால்தான் பல்வேறு பிரச்னைகள் உண்டாகின்றன'' என்று வருத்தப்படுகிறார்.

''ஆயுதக் கலாசாரம் தமிழகத்தில் எந்த அளவு பரவிக் கிடக்கிறது?'' என்று கேட்டபோது, அவர் சொன்னார். ''எந்தப் புற்றில் எந்தப் பாம்போ? சர்வதேச ஆயுத உற்பத்தியாளர்களின் ஏஜெண்டுகள் எங்கேயெல்லாமோ பரவிக் கிடக்கிறார்கள். பெரிய மனிதர்கள் என்கிற போர்வையிலும் பதுங்கி இருக்கிறார்கள். சொன்னால் நம்புவதே கஷ்டமாயிருக்கும்; இந்த வருடம் மார்ச் மாதத்திலிருந்து 'டங்நோவா' பிடிபடும் வரை கோடிக்கணக்கான மதிப்புள்ள ஆயுதங்கள் அந்தக் கப்பலின் மூலமே புலி

களுக்குச் சென்றிருக்கின்றன'' என்கிறார் அவர்.

''போராடுவதற்கு ஆயுதங்களைக் கொண்டு செல்வது ஒரு பக்கம் இருக்க, பணத்துக்காக ஆயுதங்களைப் புலிகள் நல்ல லாபத்துக்கு விற்கவும் செய்கிறார்கள்'' என்கிறார் ஒரு போலீஸ் அதிகாரி.

சமீபத்தில் மகாராஷ்ட்ரா மாநிலத்தில் உள்ள காட்சிரோலி மாவட்டத்தில் நக்ஸலைட்டுகள் வைத்த கண்ணி வெடியில் பத்துப் போலீஸ்காரர்கள் பலியானார்கள். இந்த நக்ஸலைட்டுகள் பயன்படுத்தும் ஏ. கே. 47 துப்பாக்கிகள் மற்றும் மிஷின் கன்கள், புலிகளிடமிருந்து பெறப்பட்டவை என்று தகவல்கள் கூறுகின்றன.

''அ ஸ் ஸ ா ம் தீவிரவாதிகளுக்கும் புலிகள் ஆயுதங்கள் கொடுத்தார்கள் என்று சொல்லப்பட்டாலும் அந்தத் தகவல்கள் உண்மையல்ல'' என்கிறார் விவரம் தெரிந்த ஒருவர். ''அஸ்ஸாம் தீவிரவாதிகளுக்குப் பங்களாதேஷ் வழியாக ஏராளமாக சீன ஆயுதங்கள் வருவதால், அவர்களுக்குத் தேவை ஆயுதங்கள் அல்ல. அவற்றை இயக்கும் பயிற்சிதான்'' என்று சொல்கிறார் அவர்.

காஷ்மீர் தீவிரவாதிகளுக்கும், பஞ்சாப் தீவிரவாதிகளுக்கும் ஆயுத சப்ளைக்குக் குறைவே கிடையாது; அந்த அளவுக்கு பாகிஸ்தான் தயவு அவர்களுக்கு இருக்கிறது. இது போதாதென்று ஆப்கானிஸ்தான் பகுதியிலிருந்தும் அவர்களுக்கு ஆயுதங்கள் வருகின்றன.

'தமிழக மண்ணில் ஆயுதத் தொழிற்சாலைகள் நடத்தினார்கள் போராளிகள்' என்ற குற்றச்சாட்டு இப்போது நிரூபிக்கப்பட்டு விட்டது. கோயமுத்தூர் அருகே 'கைக்குண்டு' (Grenade) தயாரிக்கும் ஒரு தொழிற்சாலையைப் போலீஸார் கண்டுபிடித்து, ஏராளமான வெடி மருந்தைக் கைப்பற்றினார்கள். கிணறு மற்றும் மலைகளில் வெடி வைத்துப் பாறைகளைத் தகர்க்க ஜெலட்டின் குச்சிகளைப் பயன்படுத்துகிறார்கள் அல்லவா! இந்த ஜெலட்டின் குச்சிகளை விற்கும் வியாபாரிகளைக் 'கவனித்து' எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு போனார்கள் போராளிகள். இவற்றையெல்லாம் வாங்குவதற்கு அவர்களுக்குப் பணத்துக்குக் குறைவில்லை. உலகின் பல நாடுகளில் இருக்கும் ஈழத் தமிழர்கள் ஏராளமாக அள்ளிக் கொடுக்கிறார்கள். போதை மருந்துகள் கை மாறுவதாலும், மக்களிடமிருந்து மிரட்டி வாங்கிய தங்கத்தை விற்பதனாலும் பணம் கணக்கின்றிப் புரள்கிறது.

இப்போது இவையெல்லாம் கட்டுப்படுத்தப்பட்டிருக்கின்றன. இருந்தாலும் ''அடக்குமுறை, கெடுபிடி, மிரட்டல் போன்றவற்றால் இந்தப் பிரச்னைக்கு முடிவு வராது. பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த நமது அரசியல்வாதிகள், அரசியல் ஆதாயத்தைப் பார்க்காமல், ஒன்றுபட்டு ஈழத் தமிழர்களின் நலனில் நிஜமான அக்கறை கொண்டு, ஒரே குரல் எழுப்பினால்தான் நல்ல காலம் பிறக்கும். போராளிகளும் போராடச் சக்தி இருக்கிறது என்பதற்காக இளைஞர்களைத் தொடர்ந்து பலி கொடுத்துக் கொண்டிருக்கக் கூடாது. நீண்ட கால ஆயுதப் போராட்டம் மக்களைச் சலிப்படைய வைக்கும். அந்த நிலையில், மக்கள் ஆதரவு விலகிப் போகும். இதைப் புலிகள் உணர்ந்து கொள்ள வேண்டும். ஒருமித்த குரலில் இந்தியா தனது செல்வாக்கைப் பிரயோகிக்க, இலங்கை அரசும் விடுதலைப் புலிகளும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து அமைதிக்கு வழி காண வேண்டும். அல்லாதவரை ஆயுதக் கலாசாரத்தின் பாதிப்பை ஈழம் மட்டுமின்றித் தமிழகமும் அவ்வப்போது உணர்ந்து கொண்டேதான் இருக்கும்.

- ப்ரியன்

படங்கள் : கிரண்



''ஊரெல்லாம் கடன் வாங்கிட்டுத் திரிவானே நம்ம பாலு... இப்ப எப்படி? கொஞ்சமாவது முன்னேறியிருக்கானா...?''

''நல்ல முன்னேற்றமுங்க. கடன் கேட்டு அலையறதுக்குன்னே இப்ப ரெண்டு ''பி.ஏ.''க்களைக் கூட வச்சிருக்கான்...

- கரடிகுளம் ஜெயபாரதிப்ரியா

# அமுதசுரபியின் 'முக்கனி'- திட்டம்



## ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ.3000/- டெபாஸிட் செய்து 6 வருடங்களில் இரட்டிப்பாக ரூ.6000/- பெறுங்கள்.

**43** வருடங்களாகத் தமிழகத்தில் வெளிவரும் ''அமுதசுரபி'' தமிழ்ப் பெருமக்களால் விரும்பிப்படிக்கப்படும் தமிழ் மாதப் பத்திரிகை.

இயல், இசை, நாடகத்துறையின் வளர்ச்சிக்கு ஊக்கம் அளிக்கும் ஸ்ரீராம் நிறுவனங்களின் ஓர் அங்கமான ஸ்ரீராம் டிரஸ்ட், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பணிபுரிய 'அமுதசுரபி'யை வெளியிடுகிறது.

அதன் தொடர்பாக வாசகப் பெருமக்களுக்கு இனிய பல நல்ல பலன்களை அளிக்கவே இந்த முக்கனித் திட்டம்.

## முக்கனி போனஸ்:

1. ஒவ்வொரு மாதமும் ''அமுதசுரபி'' மாத இதழ் முதலீடு செய்த உங்களுக்கோ அல்லது நீங்கள் விரும்பும் அன்பருக்கோ அனுப்பப்படும்.
2. வருடாவருடம் ''தீபாவளி மலர்'' பதிவுத் தபாலில் அனுப்பிவைக்கப்படும்.
3. நீங்கள் முதலீடு செய்தவுடன் உங்களுக்கு (அன்பளிப்பாக) 8 கிராம் பூஜையில் வைப்பதற்கு ஏற்ற வெள்ளிப்பதக்கம் அளிக்கப்படும்.



உங்கள் முதலீட்டுக்கு,
**ஸ்ரீராம் இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
**(Shriram Investments)**
முழு உத்திரவாதம் அளிக்கிறது.

டெபாஸிட் அனுப்ப வேண்டிய முகவரி:




**ஸ்ரீராம் டிரஸ்ட்**
தபால் பை எண். 5043
145, லிங்கிச் செட்டி தெரு,
சென்னை 600 001

### டெபாஸிட் விண்ணப்பம்

அன்புடையீர்,

அமுதசுரபியின் வளர்ச்சிப் பணிக்கு இத்துடன் ரூ.3000/- செக்/டிராப்ட் .................................. அனுப்பியுள்ளேன். இந்தத் தொகையை 6 ஆண்டுகளுக்கு தங்களிடம் டெபாஸிட்டாக அளிக்க விரும்புகிறேன்.

1. பெயர் & முகவரி ........................................................................
2. நியமிக்கப்படுபவரின் பெயர்/முகவரி ........................................................................
3. ''அமுதசுரபி'' இதழ்கள் அனுப்பப்பட வேண்டியவர் பெயர் & முகவரி: ........................................................................

அன்புள்ள,

இடம்:
தேதி:

டெபாஸிட்டர் கையொப்பம்



ADWAVE/ST/4332

# இந்திய கிரிக்கெட் தி...



"எங்கள் குழுவில் அனுபவமும் இருக்கிறது. இளமையும் இருக்கிறது. நாலு முன்னாள் காப்டன்கள் இருக்கிறார்கள், இப்போதைய குழுவில்!'' என்று ஆஸ்திரேலியாவில் போய் இறங்கிய உடனே அசாருதீன் சொன்னாலும் சொன்னார் -

முதல் இரண்டு ஒருநாள் போட்டிகளிலும் இந்தியா படு பயங்கரமாகத் தோல்வியைத் தழுவியது! அதன் பிறகு ஒருநாள் மாட்சில் வென்றாலும் மீண்டும் ஒரு பயங்கர இன்னிங்ஸ் தோல்வி!

''இதெல்லாம் ஒரு தோல்வியே அல்ல. முதல் நாள் தென்னாப்பிரிக்கக் குழுவினருடன் ஆடியவுடன், அவசர அவசரமாகத் தில்லியிருந்து கிளம்பி வந்திருக்கிறார்கள். ஒரு துளி ஓய்வு கிடையாது. போதாதற்கு மூட்டை முடிச்சுகளை அவர்களே ஏர்போர்ட்டில் சுமந்து வர வேண்டியிருந்தது... நமது குழுவுக்குச் சாதகமில்லாத சீதோஷ்ண நிலையில் அவர்கள் வந்து ஆஸ்திரேலியாவில் இறங்கினார்கள். அதுவுமல்லாமல் இந்தியச் சூழ்நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ்நிலையில் அவர்கள் தங்களை அட்ஜஸ்ட் செய்து கொள்ள வேண்டியிருந்தது!'' என்கிறார் முன்னாள் கிரிக்கெட் வீரரும் கிரிக்கெட் கோச்சுமான ஏ.ஜி. ராம்சிங்.

''அதற்கென்று, இப்படியா? ஷார்ஜாவில் பார்த்தீர்களே, முதலில் வெஸ்ட் இன்டீசையும், பாகிஸ்தானையும் வென்றவர்கள், கடைசியில் பாகிஸ்தானிடம் படு தோல்வி அடையவில்லையா? வெற்றி முகம் ஏன் தொடர்ச்சியாக இருப்பதில்லை?''

''நன்றாக இருக்கிறதே உங்கள் கேள்வி! அப்படி என்றால் வெற்றி பெறுபவர்கள் எல்லாம் தொடர்ந்து வெற்றி பெற்றுக் கொண்டே இருக்க, தோல்வி கண்டவர்கள், தோல்வியையே தழுவிக் கொண்டிருக்க வேண்டும் என்று எந்த ஆட்டத்தில் இருக்கிறது? இது மாதிரி விளையாட்டுக்களில் 'எலிமென்ட் அஃப் லக்' இருக்கிறது. அதுதான் ஆட்டத்தில் சுவாரசியத்தைக் கூட்டுகிறது'' என்கிறார் ராம்சிங்.

''தேர்வு செய்யப்பட்டிருக்கும் வீரர்களைப் பற்றி எனக்குக் குறை எதுவும் தோன்றவில்லை. ஃபீல்

☛ இன்னிங்ஸ் தோல்வி -
டெண்டுல்கரின் 82 ம் பயனற்றுப் போனது!

டிங் நன்றாகவே இருக்கிறது... மோசமான 'பிட்ச்' ஆக இருந்தால் சில சமயம் நிறைய விளாசி ரன்களைக் குவிக்க முடியும். வெற்றியை அடைய முடியும்!''



சுந்தரேசன்

''பாட்டிங்கும், ஃபீல்டிங்கும் மட்டும் நன்றாக இருந்தால் போதுமா? பௌலிங்?''

''நம்மிடம் அதிவேகப் பந்து வீச்சாளர்கள் இல்லைதான். அது ஒரு பெரிய குறை. வி ரியலி நீட் எ குட் பேஸ் பௌலர். இப்போது இருக்கிற பௌலர்கள் சிறந்தவர்கள்தாம். ஆனால் வேகம் போதாது.... அதிலும், ஆஸ்திரேலிய விக்கெட்டுகள் அதிவேகமானவை. 'பௌன்ஸ்' அதிகம். பாட் செய்வது சிரமம். அங்குள்ள சீதோஷ்ண நிலை காரணமாக, பந்து வெகுவாக 'டீவியேட்' ஆகிவிடுகிறது. ஆனாலும் நம் பையன்கள் நன்றாக விளையாடுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது!'' என்கிறார் ராம்சிங்.

''அதிவேகப் பந்து வீச்சாளர்கள் உருவாக்கப்பட நிறையச் செலவு செய்ய வேண்டும். தீவிர பயிற்சி அளிக்க வேண்டும்'' என்கிறார் அழுத்தமாக. ''எம்.ஆர்.எஃப். ஃபவுண்டேஷனில் பயிற்சி பெற்ற ஸ்ரீநாத்தும், பானர்ஜியும் இப்போது டெஸ்ட்களில் ஆட வந்திருக்கிறார்கள். அது போல வசதியும், வாய்ப்பும் பெற்ற இளைஞர்கள் மூலம் நிறையவே அதிவேகப் பந்து வீச்சாளர்கள் உருவாகலாம்!''

''ஒரு-நாள் போட்டிகள் காரணமாக, ஃபீல்டிங்கில் வெகுவாக நாம் முன்னேறியிருக்கிறோம்!'' என்று சொல்லும் ராம்சிங், ''உலகக் கோப்பையை இந்தியா வெல்லுமா என்பதை இப்போதே ஊகித்துச் சொல்லுவது சிரமமானது மட்டுமல்ல, சாத்தியமும் அல்ல'' என்கிறார்.

ஏ.ஜி. ராம்சிங்



முன்னாள் கிரிக்கெட் ஆட்டக்காரரும், கிரிக்கெட் பற்றி நுணுக்கமாக விமர்சனம் செய்பவருமான பத்திரிகையாளர் பி. என். சுந்தரேசன், ''தோல்விகளைக் கண்டு துவள வேண்டியதில்லை. ஆனால் வெற்றிகளைக் குவிக்கக் கொஞ்சம் கடினமாக உழைத்தால் போதும்'' என்கிறார்.

''ஒருநாள் கிரிக்கெட் ஆட்டம் 'சான்ஸ்கள் நிறைந்தது. நாம் ஃபீல்டிங்கில் முன்னேறியிருக்கிறோம் என்றாலும் கூட, ஒருநாள் போட்டிக்கு இது எல்லாம் போதாது'' என்கிறார் சுந்தரேசன். ''அதிலும் ஆஸ்திரேலியாவைப் பொறுத்தவரை, அவர்கள் ஒருநாள் ஆட்டத்தில் சாம்பியன்கள்.''

குழுவில் தேர்வு செய்யப்பட்டிருக்கும் ஆட்டக்காரர்கள் பற்றி, வெகு தெளிவாக அலசி வைத்திருக்கிறார் சுந்தரேசன். ''ரவி சாஸ்திரி, சஞ்சய் மஞ்ச்ரேகர், டெண்டுல்கர், அசாருதீன் ஆகியவர்கள், சூழ்நிலைக்குத் தகுந்த மாதிரி தங்களை அட்ஜஸ்ட் செய்து கொண்டு ஆடும் திறமை பெற்றவர்கள். வெங்சர்க்காரும்தான். ஆனால் அவர் துடிப்பான பருவத்தைக் கடந்து விட்டார். அவருக்குப் பதிலாகத் துணிச்சலும் திறனும் கொண்ட வினோத் காம்ப்ளி அனுப்பப்பட்டிருக்க வேண்டும். ஸ்ரீகாந்த்துக்குத் துணிச்சல் இருக்கிறது, உண்மைதான். ஆனால் அவர் காலைப் பின் வைத்தோ, முன் வைத்தோ (Neither backfoot, nor front foot) ஆடக்கூடியவரல்ல. டெஸ்ட் கிரிக்கெட்டில் சமீப காலமாக அவர் ஆடவுமில்லை. அதனால் அவர், எதிர்பார்க்கிற அளவுக்கு விளாசுவார் என்று நம்ப இடமில்லை. பிட்ச் நிலைமை சாதகமாய் இருந்து, நல்ல ஃபார்மில் இருந்தால், அசார், சாஸ்திரி, மஞ்ச்ரேகர், டெண்டுல்கர் ஆகியோர் பாட்டிங்கில் பளிச்சிட வாய்ப்பு நிறைய இருக்கிறது!'' என்கிறார்

# வெற்றிகளும் படுதோல்விகளும்!

சுந்தரேசன்.

சரி. நம்பிக்கையூட்டக்கூடிய அளவுக்கு நமது பௌலர்கள் இருக்கிறார்களா?

''முதல் இடம் கபில் தேவுக்குத்தான்!'' என்கிறார் சுந்தரேசன். ''இந்தியாவில் ஆடுவதைவிட, வெளிநாடுகளில் ஆடும் போது, கபில் அதிக வெற்றிகரமாகச் செயல்படுகிறார். ஆஸ்திரேலிய பிட்சின் கூடுதல் 'பௌன்ஸ்' உடன், 'பேஸ்'ம்' அவருக்கு நிச்சயம் உதவும். மனோஜ் பிரபாகரும் நன்றாக முன்னேறியிருக்கிறார். இவர்கள் இருவரும் ஆஸ்திரேலிய ஆட்டக் காரர்களைக் கட்டுப்படுத்த முடியும். அது முடியாமல் போகும் பட்சத்தில், ஸ்பின் பௌலர்கள் எதுவும் சாதித்துவிட முடியாது. ஏனென்றால் மிகச் சிறப்பான ஸ்பின் பௌலிங் நம்மிடம் இல்லை.''

ஆஸ்திரேலிய 'பிட்ச'களில் விசேஷமாகக் குறிப்பிடப்படும் 'பௌன்ஸ'ம், 'பேஸ'ம் எப்படிப்பட்டவை என்பதை சுந்தரேசன் சுருக்கமாக விளக்கினார் :

பந்து வேகமாக வந்து, 'பௌன்ஸ்' ஆகி இடுப்பு உயரத்துக்கு வந்து விடுமாம்! இதைப் புரிந்து கொண்டு ஆடத் தொடங்குவதற்குள் 67-68ல், சீரீஸ் முடிந்து விட்டது என்றாராம் சந்து போர்டே. அஜித் வாடேகரும் தமது தோல்விக்கு இந்த வேகப் பந்தின் 'பௌன்ஸ்' கூடுதலாகிப் போனதே காரணம் என்று சொல்லியிருக்கிறார்.

''டெக்னிகலாகச் சொன்னால், இந்திய பாட்ஸ்மென் மெதுவான, களுவான 'பேஸ்' உள்ள 'பிட்ச'களில் விளையாடி, விளையாடிப் பழகிப் போய்விட்டவர்கள். இங்கே மோசமான பௌலிங்கில் அவர்கள் வெளுத்துக்கட்டுவது சகஜம்தான். இங்கிலாந்தின் பச்சைத் தரை 'பிட்சி'லோ, ஆஸ்திரேலியாவின் அதிவேக 'பௌன்ஸ்' உள்ள 'பிட்சி'லோ இவர்களால் எதுவும் செய்ய முடிவதில்லை!'' என்கிறார் சுந்தரேசன்.

ஃபீல்டிங்கில் நாம் வெகுவாக முன்னேறிவிட்டதாக சுந்தரேசன் கருதவில்லை. ''ஃபீல்டிங்கில் நாம் 'வீக்'தான். காப்டன் அசாருதீன் இதைப் பல முறை சொல்லியிருக்கிறார்!''

– சித்தார்த்

அட்டை வண்ணப்படம், படங்கள் : சாரி

---

## கலைவிழா சிறப்பிதழின் கலகலப்பான 'ஐட்டங்கள்':

●● சேர்ந்து பாடும் சகோதரிகளுக்குள் சண்டையே வராதா...?
- நேர்முகம்

●● ஜலதரங்கம்
- இன்னிசை தரும் கிண்ணங்கள்

●● திரை இசையால் தேய்கிறதே கர்நாடக இசை...?
- எம். எஸ். விஸ்வநாதனிடம் கேட்கிறார் இசை வல்லுனர் பிரமீளா



●● இந்த வருட ஸ்பெஷல்: நிகழ்ச்சிகள் + வம்பு வழக்கு

அடுத்த வாரம் கல்கியில் படித்து மகிழுங்கள்

# சுபமங்களா

## படிப்பது ஒரு புதிய அனுபவம்!



"பரதமே எனது மொழி...!"
— டாக்டர்
பத்மா சுப்ரமணியம்

கி. ராஜநாராயணன்
— நேர்காணல்

'குணா ஏன்
தோற்றுப் போனான்?
— சினிமா விமரிசனங்கள்

மாத்தளை சோமு
— நெடுங்கதை

டி.வி. தலையில்
விழுந்த குட்டு



**சுபமங்களா**

டிசம்பர் இதழ் விற்பனை
ஆகிக்கொண்டிருக்கிறது.

---

ஆசிரியர் : கோமல் சுவாமிநாதன்

# பூடான் மன்னருக்கு என்ன பிரச்னை?

**ஸ்ரீலங்காவில் சார்க் மாநாடு திட்டமிட்டபடி நடக்க முடியாது போனது. ''காரணம், பூடான் மன்னர் பங்கேற்காததுதான்; அவருக்குப் பதிலாக அவர் பிரதிநிதியை அனுப்புவதை ஏற்பதற்கில்லை'' என்று அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது. ''சார்க் மாநாட்டை நடத்த விடாமல் செய்ய இது ஒரு சாக்கு, அவ்வளவுதான்'' என்று பல நாடுகளின் தலைவர்கள் உள்பட, அரசியல் வட்டாரங்கள் கருதின. இந்த விவாதம் ஒருபுறமிருக்க, ''பூடான் மன்னர் வர முடியாமல் போனது ஏன்? அவருக்கு என்ன பிரச்னை?'' என்ற கேள்வியும் எழுகிறது. அதற்கு விடை :**

பல ஆண்டுகளாகவே நேபாளிகள் நல்வாழ்வு தேடி பூட்டானுக்குள் நுழைந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் சமீப காலமாக அவர்களில் பலர் பூடானிலிருந்து வெளியேறுவது மட்டுமல்ல; தப்பி ஓடவே வேண்டியிருக்கிறது. இப்படி ஓடிய பலர், தங்கள் குடும்பத்தினருடன் மீண்டும் இணைந்தார்கள்; வேறு பலர் அகதிகள் முகாம்களில் உள்ளனர்.

எதற்காகத் தப்பி ஓடுகிறார்கள்? பூடானிய ராணுவத்திடமிருந்துதான். பூடானிய பாதுகாப்புப் படை இவர்களில் பலரை, ''தேச விரோதிகள்'' என்று முத்திரை குத்தி, இழுத்துக் கொண்டு போய்ச் சிறையில் தள்ளிச் சித்திரவதை செய்வதால்தான். பூடானிய ராணுவம் நேபாளிகளைக் கடத்திப் போவது, கற்பழிப்பது, செமை அடி உதை வழங்குவது என்று ஆரம்பித்திருக்கிறது. காரணம் என்ன?

பூடானிய ஜனத்தொகை எட்டு லட்சம். இவர்களில் கிட்டத்தட்ட 35 சதவீதம் நேபாளிகள் என்பது சமீபத்திய கணிப்பு. பிழைப்புத் தேடி, நல்வாழ்வு தேடி நேபாளிகள் பூடானுக்குள் வர வர, உள்நாட்டு பூடானியருக்கு வெறுப்பு.

''மனிதாபிமானத்தை மறந்து நாங்கள் யாரையும் கொடுமைப்படுத்தவில்லை'' என்று பூடானிய அரசு கூறுகிறது. இதை நம்ப யாரும் தயாராக இல்லை. 1985-ல் பூடானிய அரசு, ஒரு சட்டம் இயற்றியது. அதன்படி 1958-க்குப் பிறகு பூடானில் குடியேறிய யாரும் பூடானியர் அல்ல;

☛ மலை தேசமான பூடானின் இந்த அமைதி பொய் யானது!



☛ பூடான் மன்னருடன் இந்திய குடியரசுத் தலைவர்

பிரஜா உரிமை கிடையாது! அவர்கள் எல்லாரும் சட்டத்துக்குப் புறம்பாக வந்தவர்கள் என்று கருதப்படும்.

ஆனால் இந்தச் சட்டத்தை பூடான் அரசு தீவிரமாகச் செயல்படுத்தவில்லை. மேலும் பல நேபாளிகள் பூடானுக்குள் வந்த வண்ணமே இருந்தனர். 1988-ல் தான் பூடானிய அரசு மேற்படி சட்டத்தைக் கடுமையாக அமல்படுத்தத் தொடங்கியது.

பூடானிய கலாசாரமே நேபாளிகள் வருகையால் மாறி விடும் என்று கருதி குடிமக்கள் அனைவருக்கும் உடை விஷயத்தில் மட்டுமின்றி, வீடு கட்டுதல், உரையாடுதல் முதலிய பல அம்சங்களில் இப்படி இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும் என்று வரை முறைகளை வகுத்தது. நேபாளி மொழியை ஒதுக்கி, பூடானிய மொழியைத் திணித்தது.

இதைத் தெற்கு பூடானில் குடியேறியிருக்கும் பல்லாயிரக்கணக்கான ''நேபாளி - பூடானியர்'' எதிர்த்தனர். இந்த சட்டத்தைத் திரும்பப் பெறுமாறு மன்னரைக் கோரினர். இதற்கு மன்னர் செவி சாய்க்காததுடன் அவர்களைச் சிறைப்படுத்தினார். கோபமடைந்த நேபாளியர், 1990ல் ''பூடான் மக்கள் கட்சி'' ஆரம்பித்தனர். உடனே அந்தக் கட்சிக்கு அரசு தடை விதித்துவிட்டது.

இரண்டு இன மக்களுக்கும் இடையில் துவேஷம் வளர்ந்து விட, நேபாளி போராளிகள் அரசுக்கு எதிராக வன்முறையில் இறங்க, போலீஸார் தாக்கப்பட்டனர்; பாலங்கள் தகர்க்கப்பட்டன; அரசாங்கச் சொத்துக்கள் நாசப்படுத்தப்பட்டன.

பூடானியரிலேயே பலர், முடியாட்சிக்கு மாறான குடியாட்சி அமைய, தக்க சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டும் என்று விரும்புகின்றனர். 'சுதந்திரத் தேர்தல்கள் வேண்டும்; பத்திரிகைத் தணிக்கை கூடாது; அயல் நாட்டு டூரிஸ்டுகள் சுதந்திரமாக வந்து போக அனுமதிக்கப்பட வேண்டும்' என்கின்றனர். இவர்கள் நேபாளிகளுடன் சேர்ந்து கொண்டிருக்கின்றனர்.

அரசர் ஜிக்மே வாங்சக், எந்தப் பக்கம் சாய்வது என்று புரியாமல் தவிக்கிறார். அவருக்கு ஜனநாயகக் கோட்பாடுகளில் நம்பிக்கை உண்டு. சுதந்திரங்கள் வழங்குவது தமது நாட்டின் பொருளாதாரத்தை மேம்படுத்தும் என்று நம்புகிறார். பத்திரிகைகள் பழித்துரைப்பதை அவர் விரும்பவில்லை. பூடானின் பெருமை மாசுபடக் கூடாது என்று எண்ணுகிறார். ஆனால் அதே சமயம் அதிக சுதந்திரங்களை வழங்குவ தால் பூடானில் உள்ள நேபாளியர் கரம் ஓங்க, பூடானிய கலாசாரம் அழிந்து போகும்; எல்லாம் நேபாளி மயமாகி விடும் என்று அஞ்சுகிறார்! அவர் அச்சத்தில் நியாயம் இருக்கவும் செய்கிறது. அவருடைய ஆலோசகர்கள், பூடானுக்குள் நுழையும் அந்நியர்கள் (நேபாளிகள்) விஷயத்தில் உறுதியாக இருக்குமாறு கூறுகிறார்கள். இருந்தாலும் மன்னர் வாங்சக்கின் ஜனநாயக ஆர்வமே இறுதியில் அவரை வெற்றி கொண்டு, இறங்கி வரச் செய்யும் என்பதாக அரசியல் நோக்கர்கள் கணிக்கிறார்கள். பார்ப்போம்.

– எஸ். வி. என்.

நன்றி : நியூஸ் வீக்



''எதுக்காக சாமி சிலையைக் கடத்தினே?''

''சாமிக்கு அமெரிக்காவெல்லாம் சுற்றிக் காஸ்பிக்கிறேன்னு வேண்டுதல் எஜமான்!''

- வேலூர் கோவி. செந்தில்

# காவிரி பெருகட்டும்; அன்பு பொங்கட்டும்!



# கல்கி



1991
டிசம்பர் 8
மலர் : 50
இதழ் : 19
பிரஜோத்பத்தி
கார்த்திகை 22

காவிரி நதி நீர் பிரச்னையில் உச்சநீதி மன்றம் அளித்த சமீபத் தீர்ப்பு, ஒவ்வொரு தமிழனுக்கும் உற்சாக டானிக். தமிழகத்தின் இந்த வெற்றியில் தமிழக முதல்வருக்கும் பங்கு உண்டு என்பதால், அவர் மகிழ்ந்து போனதில் வியப்பில்லை; தவறும் இல்லை.

ஆனால் திரும்பிப் பார்க்கையில் இதே பிரச்னை தொடர்பாக, இங்கு மத்திய அமைச்சர் ஒருவர் தாக்கப்பட்டதும், இருவருக்கு துரோகிப் பட்டங்கள் வழங்கப்பட்டதும் தேவையற்ற அசம்பாவிதங்கள் என்பதை இப்போதாவது முதல்வர் புரிந்து கொண்டிருப்பார்.

நடுவர் மன்றம் இடைக்கால ஏற்பாடாகத் தமிழகத்துக்கு 205 டிஎம்சி தண்ணீரைக் கர்நாடகம் ஆண்டுதோறும் திறந்து விட வேண்டும் என்று தீர்ப்பு அளித்தது. இந்தத் தீர்ப்பை ஏற்காமல், ஏமாற்றும் நோக்கில், கர்நாடக அரசு ஓர் அவசரச் சட்டம் பிறப்பித்தது. அந்த அவசரச் சட்டம் குறித்து மத்திய அரசு, உச்சநீதி மன்றத்தின் கருத்தினைக் கேட்க, 'அவசரச் சட்டம் செல்லாது' என்பது தற்போதைய உச்சநீதிமன்றத் தீர்ப்பு.

இப்போதும் கூட பங்காரப்பா விட்டுக் கொடுக்கிறார் இல்லை! 'உச்சநீதி மன்றத்தின் தீர்ப்பு அல்ல இது; அறிவுரையே' என்று வாதாடுகிறார். நடுவர் மன்றத்திடம் மறுபரிசீலனைக்கு மனு செய்யப் போவதாகச் சவால் விடுகிறார். 'நடுவர் மன்றத் தீர்ப்பை கெஜட்டில் பதிவு செய்து சட்டமாக்கக் கூடாது' என்று பிரதமரிடம் தூது போகிறார்.

கர்நாடகத்தின் நலனில் அக்கறை கொண்டுள்ளதாக முதல்வர் பங்காரப்பா காண்பித்துக் கொள்ள வேண்டும்தான். அதற்காக அபத்தமான நிலைகளுக்குப் போகக் கூடாது. 'போராடிப் பார்த்தோம்; உச்சநீதி மன்றத்தின் தீர்ப்பை ஏற்போம்' என்றுதான் மக்களுக்கு அவர் கூற வேண்டும். அதுவே புத்திசாலித்தனமும் கௌரவமும் ஆகும். மாநிலங்களிடையே நட்பும் சகோதரத்துவமும் வளர வேண்டுமேயன்றி, விரோத பாவம் அல்ல. ஒருமைப்பாடு குலையும் விதமாக யாரும் நடந்து கொள்ளக் கூடாது; முக்கியமாகத் தலைவர்கள், அதிலும் முதல்வர்கள்.

நதி நீர் என்பது தனி நபர் சொத்து அல்ல; ஒரு மாநிலத்தின் தனி உரிமையும் அல்ல. காலம் காலமாகக் காவிரி நீரைப் பயன்படுத்தி விவசாயம் செய்து வந்திருப்பவர்களின் வயிற்றிலடிப்பது போல், நதியை வற்றிப் போகச் செய்வதை உலகின் எந்த நாட்டுச் சட்டமும் ஏற்காது. இந்த அனுபவ பாத்தியதைக்கு, Riparian rights என்று பெயர்.

கர்நாடக முதல்வரின் கெடுபிடிகளுக்குப் பிரதமர் மசியவில்லை என்பதும் 'விரைவிலேயே உச்சநீதி மன்றத் தீர்ப்பை அமுல்படுத்த மத்திய அரசு நடவடிக்கை எடுக்கும்' என்று அவர் கூறியிருப்பதும் மகிழ்ச்சிக்குரிய செய்திகள்.

தமிழக அரசும் தன் பங்குக்குச் சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும். 'குறைந்தபட்சமாகக் காவிரியில் நீர் வந்தாலும் அதனை அதிகபட்ச பலன் கிடைக்குமாறு பயன்படுத்துவது எப்படி? உபரி நீர் வரும் போது சேமிக்க வசதிகளைப் பெருக்குவது எவ்வாறு?' என்றெல்லாம் விஞ்ஞான ரீதியாகத் திட்டம் வகுத்து, அமுல்படுத்த வேண்டும்.

அது மட்டுமல்ல, 'கர்நாடக மக்களின் நல்லெண்ணத்தைப் பெறும் விதமாக இங்கு நாம் செயலாற்ற முடியுமா?' என்றும் பார்க்க வேண்டும். கன்னட விழா எடுப்பது, கர்நாடக அறிஞர்களையும் கலைஞர்களையும் கௌரவிப்பது என்பதெல்லாம் ஒருபுறமிருக்க; கர்நாடகத்தின் அத்தியாவசியத் தேவை எதையேனும் நாம் பூர்த்தி செய்து வைக்க முடியுமா என்றும் பார்க்கலாம்.

பரஸ்பரம் உதவுவதும் அன்பு செலுத்துவதும்தான் இரு மாநிலங்களும் உயர்ந்தோங்கச் சிறந்த வழி.



வானிலை அறிக்கையே தலைப்புச் செய்தியாகும் நாட்கள்...

# மழை பெய்யுமா? இன்ஸாட்டைக் கேளுங்கள்!

'...இனி வானிலை அறிக்கை...' என்று வானொலி அறிவிப்பாளர் தொடங்கும் போது ரேடியோவை அணைத்து விட்டு நகர்பவர்கள்தான் அதிகம். அப்படிப்பட்டவர்கள் கூட கவனமாக வானிலை அறிக்கை கேட்பது தமிழ்நாட்டில் பருவமழை பெய்யும் நவம்பர் டிசம்பர் மாதங்களில். இந்த சீஸனில் வானிலை அறிக்கையே கூட தலைப்புச் செய்தியாவதற்கு வாய்ப்பு இருக்கிறதே!

தமிழகம் மற்றும் இதர தெற்கு மாநிலங்களின் வானிலையை விஞ்ஞான பூர்வமாய் ஆராய்ந்து அறிக்கைகள் அளிக்கும் பணியைச் செய்து வருவது சென்னை காலேஜ் ரோடில் உள்ள India Meteorological Department. வெளிப்புறத்திலிருந்து பார்த்தால் சராசரி கட்டடமாகத் தோற்றமளிக்கிறது இந்த அலுவலகம். அதன் வளாகத்தில் காணப்படும் ஓரிரு 'டிஷ் ஆன்டெனா'க்களைப் பார்த்ததும்தான் அது ஒரு முக்கியமான கேந்திரம் என்ற எண்ணம் ஏற்படுகிறது.

இந்த வானிலை ஆராய்ச்சி மையத்தின் பின் ஒரு நீண்ட சரித்திரமே உள்ளது. கிட்டத்தட்ட இருநூறு ஆண்டுகளுக்கு முன் (1792) கிழக்கிந்திய கம்பெனியினர் இவ்விடத்தில் ஒரு தொலைநோக்குக் கருவியை நிறுவினார்கள். வானிலை ஆராய்ச்சிக் குறிப்புகள் 1793 முதல் பதிவு செய்யப்பட்டன. இந்த முயற்சியைக் குறிக்கும் நினைவுச் சின்னம் இன்றும் அந்த வளாகத்தில் இருக்கிறது. 1875-இல், வானிலை ஆராய்ச்சித் துறை அதிகாரபூர்வமாகத் துவங்கப்பட்டது.

ஆரம்ப நாட்களில் புயல் எச்சரிக்கை போன்ற முக்கிய செய்திகளைச் சம்பந்தப்பட்ட இடங்களுக்கு அனுப்ப, தரை வழித் தொடர்பு சாதனங்களையே நம்பியிருந்தது வானிலை ஆராய்ச்சித் துறை. ஆனால் புயல், சூறாவளிக் காலங்களில் இந்தச் சாதனங்கள்தான் விரைவில் செயலிழக்கும் என்பதால் முக்கியச் செய்திகளைத் தெரிவிப்பது கஷ்டமாக இருந்தது.

செயற்கைக் கோள் யுகம் பிறந்த பிறகு இந் நிலைமையில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. தற்போதைய நடைமுறையை விளக்கினார் நிலையத்தின் இயக்குனர் எஸ். கே. சுப்ரமண்யன் :

''பூமிக்குச் சுமார் 36,000 கிலோ மீட்டர் உயரத்தில் இந்திய தீபகற்பத்துக்கு நேர் மேலாக இருக்கிறது இன்ஸாட் 1-D செயற்கைக் கோள். பூமியின் சுழற்சியையொட்டியே அதுவும் சுழன்று வருவதால் அதன் 'பார்வை' நிரந்தரமாக இந்தியாவின் மீதே இருக்கும். இன்ஸாட் 1-D, இந்தியாவின் வானிலையைப் படம்பிடித்து அனுப்பிய வண்ணம் இருக்கும். இச் செயற்கைக் கோள் அனுப்பும் சமிக்ஞைச் செய்திகளும் படங்களும் எங்கள் அலுவலகத்தில் உள்ள நவீன உபகரணங்களுக்கு வந்து

சேரும். இங்கே பணிபுரியும் வல்லுனர்கள் அவற்றை ஆராய்ந்து அறிக்கைகள் தயாரிப்பார்கள்.

''இன்ஸாட் 1–D யிடமிருந்து பெறப் படுவதைப் போன்ற வானிலைப் படங்கள் அமெரிக்க செயற்கைக் கோளான 'நோவா ஸ்விஸ்' ஸிடமிருந்தும் பெறப்படுகின்றன. நோவா ஸ்விஸ் இன்ஸாட்டைப் போல் பூமியின் சுழற்சியையொட்டி நகர்வ தில்லை. அது சுயமாகப் பூமியைச் சுற்றி வருகிறது. நாளொன்றுக்கு இரண்டு முறை இந்தியத் துணைக் கண்டத்தின் மேலாக 'நோவா' கடந்து செல்லும். இந்தச் சமயத்தில் அது எடுக்கும் படங்கள் எங்கள் வானிலை ஆராய்ச்சி மையத்துக்குக் கிடைக்கின்றன. நோவா, பூமியிலிருந்து சுமார் எட்டாயிரம் கிலோ மீட்டர் உயரத்திலேயே சுழன்று வருவதால் அது அனுப்பும் படங்கள் இன்னும் தெளிவாக இருக்கும்.

''இந்தப் படங்களைக் கூர்ந்து ஆராய்ந்து வானிலை அறிக்கைகளை வல்லுனர்கள் தயாரிப்பார்கள். இந்த அறிக்கைகள் - முக்கியமாகப் புயல் பற்றிய எச்சரிக்கை செய்திகள் வானொலிக்குத் தெரிவிக்கப்படுவதுடன் மீண்டும் - இன்ஸாட் 1–D செயற்கைக் கோளுக்கே அனுப்பப்படுகின்றன. எந்தச் செய்தி எந்த இடத்துக்குத் தெரிவிக்கப்பட வேண்டும் என்ற சமிக்ஞையும் செயற்கைக் கோளுக்கு அனுப்பப் படுகிறது. தென் மாநிலங்களில், சம்பந்தப்பட்ட மாநில அரசு அலுவலகத்தை செயற்கைக் கோள் 'கண்டுபிடித்து', எச்சரிக்கைச் செய்தியை அங்கு அனுப்புகிறது. அச் செய்திகளைப் பெறும் நவீன வசதிகள் படைத்த அலுவலகத்தில் உடனே எச்சரிக்கை சைரன்கள் ஒலிக்க ஆரம்பிக்கும். மாநிலம் முழுவதற்கும் உடனடியாகச் செய்தி போய்ச் சேரும்.

''புயல் எச்சரிக்கை நிலையங்கள் விசாகப்பட்டினம் முதல் நாகர்கோயில் வரை தெற்குக் கடற்கரை நெடுகிலும் இருக்கின்றன. இந் நிலையங்களில் புயலின் போக்கைக் கணிக்க ரேடார்கள் உள்ளன. அரசாங்கம் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுப்பது சுலப சாத்தியமாகி விட்டது'' என்று திருப்தியுடன் கூறினார் சுப்ரமண்யன்.

☛ சென்ற ஆண்டு மே மாதம், வங்கக் கடலில் உருவான புயல் சின்னத்தின் இன்ஸாட் படம். இப் படத்தை எடுத்த இன்ஸாட் 1-B யின் ஆயுள் முடிந்து விட, அந்த இடத்தில் இன்ஸாட் 1-D பணியாற்றுகிறது...

**ப**ருவ மழைக் காலத்தில் வானிலை ஆராய்ச்சி மையத்தின் ஊழியர்கள் இரவு பகல் நோக்காமல் இன்ஸாட் சமிக்ஞைகளைக் கண்காணித்துக் கொண்டிருப்பார்கள். மற்ற மாதங்களில் 'டென்ஷன்' இல்லாத வேலைதான்.

மத்திய அரசின் விஞ்ஞான, தொழில் நுட்பத் துறையின் கீழ் செயல்படும் இம் மையத்தில் பெரும்பாலும் கணிதம், பிஸிக்ஸ், புள்ளி விவர இயல் பட்டதாரிகள் பணிபுரிகிறார்கள். பூனாவில் இத்துறைக்கான சிறப்புப் பயிற்சி மையம் ஒன்று இருக்கிறது.

''**இ**வ்வளவு நவீன வசதிகள் இருந்தும் சில சமயங்களில் உங்கள் அறிக்கைகள் பொய்ப்பது ஏன்...?'' எனக் கேட்டோம் இயக்குனரிடம்.

''சில இயற்கை மாற்றங்கள் அதிவேகமாக நிகழ்வதுதான் காரணம். திடீரென்று சில மழை மேகங்கள் திரண்டு இடி, மழை பொழியலாம். அந்த வேகத்துக்கு நமது தகவல் தொடர்பினால் ஈடுகொடுக்க முடியாமல் போகலாம். அதற்காக வானிலை ஆராய்ச்சி நிலையத்தினரைக் குறை கூறுவது நியாயமில்லை! முக்கியமான, பெரிய பாதிப்புகளை விளைவிக்கக்கூடிய வானிலை மாற்றங்களை முன்கூட்டியே கண்டறிய முடியும். அவை குறித்து எச்சரிக்க நாங்கள் தவறியதே இல்லையே...'' என்று சிரித்தபடி கூறினார் சுப்ரமண்யன்.

- சந்தியா ராமன்.




அப்படியென்றால் உடனே சாப்பிட முந்துங்கள். உங்களின் இஷ்டப்படி **ஃப்ளையிங் ஹார்ஸ்** பாஸ்மதி அரிசியால் தயாரித்த, நறுமணமுள்ள சுவையான உணவை சாப்பிட்டு மகிழுங்கள். சுவைமிக்கது மட்டுமின்றி, ஊட்டச்சத்தும், புரதசத்தும் அடங்கியதும் கூட. ஒரு முறையான விருந்தளிப்பதற்கு சரியான தேர்ந்தெடுப்பு, **ஃப்ளையிங்ஹார்ஸ்** பாஸ்மதி அரிசிதான்.



FLYING HORSE

தயாரிப்பாளர்கள்: கரம் சிங் ரகபீர் சிங், அம்ரித்ஸர். தொ. பே: 3398 FAX: 30000
தமிழக விநியோகஸ்தர்கள்: பங்கஜ் டிரேடர்ஸ், சென்னை 600 079. தொ. பே: 527600



**சங்கீதா** புதிய வெளியீடு..

# ஆறுமுகன் புகழ் பாடு

4 ECD 4191

கலியுகவரதன் கண்கண்ட தெய்வமாம் திருமுருகன் புகழ் பாடும் முத்தான புத்துப் பாடல்கள், குயில் போன்ற குரலில் பாடி மகிழ்விக்கும் ஆற்றல் மிக்க திருமதி. **எஸ். ஜானகி** அவர்கள் குரல் வண்ணத்தில் பாடப்பட்டு வெளிவந்துள்ளது. இசைவண்ணம் கொடுத்திருப்பது அனுபவம் மிக்க திரு. டி. கிருஷ்ணன். பாடல்களை திரு. கீதப்பிரியன் இயற்றியுள்ளார். முருகபக்தர்கள் கேட்டு மகிழ ஒரு இனிமையான படைப்பு.

**தி மாஸ்டர் ரிக்கார்டிங் கம்பெனி**

த.பெ.எண் 5348, வடபழனி, சென்னை-600026. ☎ 420801/420802

BINLOOP DUPLICATION WITH DOLBY HXPRO

50 போட்டிக் கவிதை

# சிதைந்துபோகும் சின்னப்பூக்கள்!



கருவிலேயே கல்விதனைத் தொலைத்து விட்டு
கடைசிமூச்சு உள்ளவரை உழைத்த வர்கள்
உருவிலேயே சிறியோர்தான் என்ற போதும்
உழைப்பதிலே குறைந்தவராய் நின்ற தில்லை
ஒருபொழுது பள்ளிக்குச் சென்றி ருந்தால்
உலகமகா காப்பியங்கள் கிடைத்திருக்கும்
இருகண்கள் முகத்தினிலே பெற்றி ருந்தும்
இவர்கட்கு இன்னொருகண் கல்வி இல்லை!

அவர்கையில் நூல்கள்தான் இருக்க வேண்டும்
ஆனாலும் மேய்ப்பதெல்லாம் ஆடு மாடு
சிவகாசிப் பட்டாசுத் தொழிலே தன்னில்
சிறுவர்கள் உழைப்பேதான் விஞ்சி நிற்கும்
கவர்ந்திழுக்கும் திரைப்படத்தின் வலையில் வீழ்ந்தார்
கல்விநீக்கி கவர்ச்சிதன்னை முதலாய்க் கொண்டார்
நவலோகச் சிற்பிகளாம் நம்மின் கண்கள்
நலிகின்றார் நாளெல்லாம் அந்தோ! காண்மின்!

பட்டங்கள் ஏந்தவேண்டி யஅன்பர் வீணாய்
பலநிலையில் எந்திரங்கள் சுத்தம் செய்வர்
திட்டங்கள் பலதந்து தழைக்க நின்றோன்
திரிந்திடுவான் மலிமதுவில் தெருவின் மீதே
தட்டுத்த டுமாறும்ச முதாயம் மீள
தடங்காட்ட வேண்டியவன் உணவு இல்லில்
இட்டுக்கி டக்கின்ற எச்சில் தட்டை
எடுக்கின்ற நிலைபாரீர்! இதுவா நீதி?

ஆலைப்ப ணியிலேதான் அல்லல் தன்னில்
ஆட்டுவிக்கப் படுகின்ற சிறுவர் அய்யோ!
சாலைப்ப ணிகளிலும்ச லித்தல் இல்லை
சக்கரமாய்ச் சுற்றுகின்றார் வாடு கின்றார்
சோலைக்கு ரலினிலேசொக் கிவிழ நின்றோர்
சோற்றுத்தே வைக்கேகண் ணாம்பு தேய்ப்பர்
காலைபுல ராதா?கண் மணிகள் மீண்டும்
கல்விதனைக் காணாதா? வழிதான் செய்வீர்!

- கோ. செல்வம்
(அறிமுகம்)

# விலை கொடுத்து வாங்கும் ஆபத்துகள்!



◀ கே. ஆர். ரங்கசுவாமி

"கொசுவத்தி (Mosquito Coil) மற்றும் கொசுவில்லை (Mosquito Mats) போன்றவற்றைத் தொடர்ந்து உபயோ கிப்பவர்களுக்கு, புற்றுநோய் வருவதற் கான சாத்தியக்கூறு அதிகம் இருக்கிறது என்றும் அதற்குக் காரணம், அந்தப் பொருள்களில் கலந்துள்ள ரசாயனங்களே" என்றும் சமீபத்தில் இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் ஹாரி மில்லர் ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

பல மேலை நாடுகள் இவற்றின் உப யோகத்தைத் தடைசெய்து விட்டனவாம். "இந்தியாவில் இந்தப் பொருட்களை உற்பத்தி செய்பவர்கள், என்னென்ன ரசாய னங்களைக் கலந்து இவற்றைத் தயாரிக்கி றார்கள் என்பதை அறிவிப்பதோடு, உட லுக்கு ஊறுவிளைவிக்காதவை அவை என்று உத்தரவாதமும் அளிக்க வேண்டும்; இதைக் கட்டாயமாக்க வேண்டும்" என் றும் சொல்லியிருந்தார் ஹாரிமில்லர்.

இவரது கடிதத்தைத் தொடர்ந்து, "கொசுவத்தி, கொசுவில்லை மட்டுமல்ல, நாம் அன்றாடம் உபயோகிக்கும் ஷாம்பு, கிளீனிங் பவுடர், பெயிண்ட், போன்றவற் றிலும் கூட நச்சுத்தன்மை கொண்ட ரசாய னங்கள் கலந்துள்ளன. இவற்றினாலும் நமக்கு ஆபத்துள்ளது" என்று நங்கநல்லூ ரில் இருந்து கே. ஆர். ரங்கசுவாமி என் பவர் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்.

மேலும் விளக்கமாகத் தெரிந்து கொள்ள ரங்கசுவாமியை அணுகினோம் :

"இயற்கையை, மனிதகுலத்துக்கு எந்த அளவுக்குத் தேவையோ அந்த அளவுக்குத் தான் பயன்படுத்த வேண்டும். ஓர் எல்லைக்கு மீறி இயற்கையைச் சோதித் தால் நமக்கே ஆபத்தாக முடியும். ஆஸ்தி ரேலியாவில் கோதுமை உற்பத்தியில் புரட்சி செய்ய வேண்டுமென்பதற்காக நிலத்தடி நீரையும், ரசாயன உரங்களையும் ஏகமாகப் பயன்படுத்தினார்கள். விளைவு : இன்று லட்சக்கணக்கான ஏக்கர் நிலம் பயனற்றுப் போய் விட்டது!

"இத்தனை ஏன்? நாம் அன்றாடம் வீட்டில் பயன்படுத்தும் பொருட்களால் உண்டாகும் ஆபத்துக்களைப் பற்றி நமக்கு யாராவது உணர்த்தியிருக்கிறார்களா?

"இன்று மக்கள் பரவலாகப் பயன் படுத்தும் பொருள் ஷாம்பு. கவர்ச்சிகர மான விளம்பரங்கள். எதைக் கொண்டு ஷாம்புவைத் தயாரிக்கிறார்கள்? யாருக்கா வது தெரியுமா? அழுக்கு எடுத்தல், பளபளப்புக் கொடுத்தல், பொடுகுகளைப் போக்குதல், இவை ஷாம்புவின் பணிகள். இவற்றில் பொடுகுகளைப் போக்கும் பணியைச் செய்ய செலினியம் சல்பைட் என்ற ரசாயனத்தை ஷாம்புவில் கலக் கிறார்கள். இது ஆபத்தானது. தொடர்ந்து ஷாம்புவைப் பயன்படுத்தி வருபவர் களுக்கு நோய் எதிர்ப்புத் தன்மை குறை வாக இருந்தால் புற்றுநோய் ஏற்படும் வாய்ப்பு இருக்கிறது. ஆனால் ஷாம்பு தயாரிப்பவர்கள் இதை வேகமாக மறுக்க லாம். அப்படியென்றால், பொடுகுகளைக் கொல்ல என்ன ரசாயனத்தை அவர்கள் பயன்படுத்துகிறார்கள் என்பதைச் சொல்ல வேண்டும். மேலை நாடுகளில் ஷாம்பு தயாரிப்பவர்கள் உறையின் மேல் என் னென்ன கலந்து தயாரித்தது என்ற விவ ரத்தைக் குறிப்பிடுகிறார்கள். இந்தியாவில் எத்தனை பேர் அதைக் கடைப்பிடிக்



☛ ரசாயனப் பூச்சி கொல்லிகள் : பூச்சிகளை அன்று கொல்லும்; மனிதனை நின்று கொல்லும்!

கிறார்கள்?

''இதே போல், பெயிண்ட் உற்பத்தியின் போது 'காட்மியம்' என்ற ரசாயனத்தைக் கலக்கிறார்கள். இது உடலுக்கு ஒவ்வாதது. பாத்திரங்களைச் சுத்தம் செய்யவும் ஏகப்பட்ட கிளீனிங் பவுடர்கள் மார்க்கெட்டுக்கு வந்துள்ளன. இவற்றில் என்னென்ன ரசாயனங்கள் கலந்திருக்கின்றன என்று யாருக்காவது தெரியுமா? கைகளில் உறையில்லாமல், இவற்றைப் பயன்படுத்தும் நம் பெண்மணிகளுக்கு காலப்போக்கில் எந்தப் பிரச்னையும் வராது என்று கிளீனிங் பவுடர் உற்பத்தியாளர்களால் உத்தரவாதம் கொடுக்க முடியுமா?

''நான் சொல்ல வருவது என்னவென்றால், 'ஆபத்தில்லாத பொருட்களைப் பயன்படுத்தி உற்பத்தி செய்துள்ளோம்' என்று சொல்வது மட்டும் போதாது. என்னென்ன கலந்து தயாரிக்கப்பட்டது என்பதையும் உறையில் குறிப்பிட வேண்டும், என்பதுதான். இதை அரசு கட்டாயமாக்கிச் சட்டம் கொண்டுவர வேண்டும். அரசு செய்யுமா?

''உலகின் மிகச் சிறந்த சுற்றுப்புறச் சூழல் அறிஞர்கள், பன்னிரண்டு விதமான ரசாயன பூச்சிக் கொல்லிகளைப் பயன்படுத்தக் கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள். இவற்றை 'Dirty dozen' என்று அழைக்கிறார்கள். இவை, தாவரங்களைப் பல்வேறு நோய்கள் தாக்காமலும் பூச்சி அரிக்காமலும் காக்கப் பழமரங்கள் முற்றும் பயிர் பச்சை மீது தெளிக்கப்படுகின்றன. பல மேல் நாடுகளில் இந்தப் பூச்சிக் கொல்லிகளின் உற்பத்தியை நிறுத்தி விட்டார்கள். ஆனால் இங்கே என்ன நிலைமை? அந்த பன்னிரண்டில் ஒன்றான டி. டி. டி. யை (D.D.T.) அரசே இன்னும் உற்பத்தி செய்கிறது!

''பஞ்சாபில், தாய்மார்களின் தாய்ப்பாலைச் சோதனை செய்த போது, 48 சதவீதம் டி.டி.டி.யின் சாயல் அதில் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது! மேலை நாடுகள் இந்த விஷயங்களில் விழிப்பாக இருக்கின்றன. முன்பு நம் நாட்டிலிருந்து பதப்படுத்தப்பட்ட தோல் ஜெர்மனிக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. ஆனால் தோலைப் பதப்படுத்த பி. சி. பி. (PCP) என்ற நச்சுத் தன்மை கொண்ட ரசாயனத்தைப் பயன்படுத்தியதால் ஜெர்மனி, ''உங்கள் தோல் எங்களுக்கு வேண்டாம்'' என்று சொல்லி இறக்குமதியை நிறுத்தி விட்டது! மக்கள் நலனில் அவர்களுக்கு எவ்வளவு அக்கறை பாருங்கள்!'' என்று கூறும் ரங்கசுவாமி தொழில் ரீதியாக ஒரு எலெக்ட்ரானிக்ஸ் இன்ஜினியர். பாரத மின்னணு நிறுவனத்தில் உயர் பதவி வகித்தவர்.

''நம் நாட்டிலும் நுகர்வோர் விழிப்புணர்வு படிப்படியாக அதிகமாகிக் கொண்டுதான் வருகிறது! எடுத்துக்காட்டாக, பானங்களில் (Soft drinks) பி.வி.ஓ. (B.V.O.) என்ற பொருளைக் கலப்பதைத் தெரிந்து நடந்த இயக்கம். இப்போது இந்தப் பானங்களின் தயாரிப்பாளர்கள், ''எங்கள் பானத்தில் B.V.O. கிடையாது'' என்று அச்சிடும் அளவுக்கு வந்திருக்கிறார்கள். இதுபோன்று ஒவ்வொரு பொருளிலும் உள்ள ஆபத்தை எதிர்த்து நாம் போராட வேண்டும்'' என்கிறார்.

சந்திப்பு : ப்ரியன்

# கம்ப்யூட்டர் கிராமம்

**19**

ப்ரமிளாவுக்கு மரத்து முனிஸ்வாமி தேகத்தில் புகுந்து பேசுகிறார் என்கிற செய்தி, எப்படியோ கிராமம் முழுவதிலும் அண்டை அசலிலும் பரவி, வீட்டு வாசலில் பெரிய கூட்டம் கூடியிருந்தது. பூசாரி அந்தக் கூட்டத்தில் பிரதானமாக இருந்து, ''முனீஸ்வரன், உண்மையான பக்தர்களில் யார் வேண்டுமெனினும் தேர்ந்தெடுத்து, அவர் மேல் வருவார்'' என்று சொல்லிக் கொண்டு பிரசாதம் அளித்துக் கொண்டிருந்தார். ப்ரமிளா நடந்து கொள்ளும் விதம் மனோஜுக்கு மிக வியப்பாக இருந்தது. எப்படி அவளால் அத்தனை அமானுஷ்ய தோற்றம் பெற முடிந்தது. அல்லது இந்தத் தோற்றம் இவன் மனத்தின் பிரமையா? பத்துப் பேர் சொல்வதால் ஏற்படுகிற கட்டாய மன பிம்பமா?

ப்ரமிளா இப்போது மனோஜ் சொல்வதைக் கேட்பாள் எனத் தோன்றவில்லை. ஏதோ சாவி கொடுத்தவள் போல நடந்து தெருவுக்கு வந்தாள். இருட்டில் சிலர் தீப்பந்தங்கள் கொண்டு வந்தார்கள். ப்ரமிளா நடந்து செல்ல, அவளுக்குச் சுற்றிலும் ஒரு வட்டம் அமைத்தார்கள். பல பேர் அவள் பாதத்தைத் தொட்டு நமஸ்காரம் பண்ணுவது மனோஜுக்கு வெறுப்பாக இருந்தது. என்ன ஒரு பைத்தியக்கார ஜனங்கள். என்ன ஒரு பைத்தியக்கார நம்பிக்கை!

''ப்ரமிளா, எங்கே போறேம்மா?''

''மண்டபத்துக்கு. என் பின்னால் வா. மூச்சுத் திணர்றது. வெளியே வந்து ஆகணும்!''

எல்லோரும் முனீஸ்வரன் பற்றிச் சொல்லச் சொல்ல அதனால் ஏற்பட்ட ஹிஸ்டீரியாவின் தாக்கமோ?

''முனீஸ்வரர் உங்க மனைவி மூலம் பேசுறாங்க!''

''பூசாரி நான் இதை நம்பலை.''

''பின்ன எப்படி இவங்க வழி தெரிஞ்சா மாதிரி நடக்குறாங்க? சொல்லி வச்சாப்பல சதிர்க் கச்சேரி மாதிரி பதிய நடக்கறாங்க. எங்கேயாவது பார்க்கறாங்களா? எதையாவது மதிக்கிறாங்களா? முனிதாங்க இது.''

''என்ன எழவோ!''

''எழவு கிழவுங்காதிங்க! தெய்வ காரியம்.''

ப்ரமிளா ஊருக்கு வெளியே பொம்மை போல நடந்து சென்று, நடேச பண்டிதரின் வீட்டைக் கடந்த போது, உஜாகர் சிங் கட்டிலிலிருந்து எழுந்து நின்று பார்த்தான். அவனுடன் கூட வந்த சர்தார்ஜியும் மௌனமாக அந்த ஊர்வலத்தைக் கவனிக்க, ப்ரமிளா அல்லி மலர்களும் தாமரை இலைகளும் மலர்களும் நிறைந்திருந்த

**சுஜாதா**



தண்ணீரே தெரியாத குளத்தில் சரசர வென்று இறங்கினாள்!

''இது என்ன குளங்க?''

''பழங்காலத்துக் குளம்க. யாரும் கிட்டே போனதில்லை...''

ப்ரமிளா அல்லித் தண்டுகளை விலக்கி, இடுப்பளவு தண்ணீரில் நேராக அந்தக் குளத்தின் மத்தியில் இருக்கும் மண்டபத்தை நோக்கிச் சென்றாள். மற்ற வர்கள் தயக்கத்துடன் பின்தொடர, தீவட்டி நெருப்புக்கள் அவ்வப்போது தெரிந்த தண் ணீரில் நடனமாடின.

''பிடி பிடி... மூச்சுத் திணறுது. என்னை வெளியே எடுத்துடு. சாமி நான் வெளியே வந்தே ஆகணும்.''

''என்ன சாமி?''

''தோண்டு.''

''எங்க சாமி?''

''நிக்கற இடத்தில். கடப்பாரை கொண்டு வரலை?'' என்று அதட்டினாள்.

''இதோ சாமி, இதோ! டேய் காளி, கருப்பா! கடப்பாரை கொண்டு வாடா!''

அவர்களில் சிலர் ஓடிப் போக, ப்ரமிளா குளிரில் போல நடுங்க ஆரம்பித் தாள். இடுப்புப் புடைவை ஈரமாகிப் பாசி படர்ந்திருந்தது. தலைவிரிந்திருந் ததை முடிக்க முயன்றான் மனோஜ். ''தொடாதே'' என்று அவனைத் தள்ளினாள் ப்ரமிளா.

''இப்ப அவங்க உங்க மனைவி இல் லீங்க!''

''பின்னே யாராம்?''

''எங்க முனீஸ்வரர்! குரலே மாறிப் போயிருச்சு. தெரியாம கேக்கறீங்களே!''

ப்ரமிளா இருந்த இடத்திலேயே நடுங்கிக் கொண்டு கையைத் தேய்த்துக் ''கொண்டா கொண்டா'' என்றாள். உஜாகர் சிங்கும் மௌன சிங்கும் வேடிக்கை



பார்த்துக் கொண்டிருக்க, மூங்கில் கம்பு களும் தோரணங்களும் டீசல் ஜெனரேட் டரும் குழல் விளக்கும் வந்து சேர்ந்தன. கடப்பாரைக்குப் போயிருந்த வர்கள் திரும்பி வந்து விட அவர்கள் ஆயுதங்களைப் பிரயோகித்து ப்ரமிளா காட்டிய இடத்தில் -

''தோண்டு'' என்றாள்.

''முனீஸ்வரா இங்க என்ன?''

''நான்! தோண்டு... முட்டுது... தோண்டு.''

அவர்கள் வச்சக் வச்சக் என்று கடப் பாரை போட்டுத் தோண்ட ஆரம்பிக்க, ப்ரமிளா எதிரே பார்த்துக் கொண்டு முனு முனுத்துக் கொண்டே காத்திருந்தாள். ஆடி னாள்.

மனோஜ் தலையில் கையை அழுத்திக் கொண்டு மண்டபத்தின் ஓரத்தில் உட் கார்ந்து கொண்டு விட்டான். தவளைகள் சப்தமிட ஆரம்பித்தன.

கொஞ்ச நேரத்தில் 'ணங்'கென்று கல் லில் கடப்பாரை படும் சப்தம் கேட்க, கூட் டத்தில் சின்னதாக ஆரவாரம் புறப்பட்டது. ''ஆ! இத பாருய்யா!''

''என்ன?''

''முகம்.''

''யாரு முகம்?''

''முனீஸ்வரரு.''

''சாக்கிரதை, சாக்கிரதை. விரிஞ்சுறப் போவுது; பட்டுறப் போவுது.''

மனோஜ் எழுந்து கூட்டத்தைப் பிரித்துப் பார்க்க அவர்கள் தோண்டிய இடத்தில் ஒரு கற்சிலை தெரிந்தது. தலை யில் கிரீடமும் நீண்ட காதும் கன்னத்தில் உப்பலும் தாடையில் அழுத்தமும் சற்றே புன்னகையுமான கரிய சிலை.

''என்னை எடு! என்னை... மூச்சு முட்டுது.''

''மெல்ல மெல்ல!''

''அட! சொன்னேன் பார்த்திங்களா! இந்த அதிசயம் வேற எங்கயாவது நடக் குமா? முனீஸ்வரா, முனி தேவா! முனியே முக்கண்ணப்பா!''

''என்ன ஆச்சரியம் பாத்தீர்களா?''

மனோஜ் ஆடிப் போய் விட்டான். நிஜ மாகவே ப்ரமிளாவுக்கு அந்த சக்தி உள் ளதா! எப்படி இவளுக்கு இந்தப் பாழ டைந்த மண்டபத்தில் சிலை புதைந்திருப் பது தெரியும். இந்த இடத்துக்கு வந்ததே இல்லையே! நான் எந்தவிதத்தில் இதைப் புரிந்து கொள்வது.

அவர்கள் அனைவரும் முனீஸ்வரனை விழுந்து விழுந்து சேவிக்க, ப்ரமிளாவிடம் பூசாரி ''தாயே, வேற என்ன ஆக்கினை முனியம்மா?'' என்றான்.

''பூசாரி என்னை இங்க ப்ரதிஷ்டை பண்ணிடுங்க! எனக்கு மூச்சுக் காற்று போதும். இங்கதான் எனக்கு இனிமே வாசம்! இங்கதான் இருக்கப் போறேன். எம் பேரு முனிபுங்க ஸ்வாமி மனோஜ் முனி!''

''அப்படியே சித்தம் சுவாமி.''

''திங்கள் கிழமை சிங்கமுகத் திண் ணையில

சேர்ந்திருக்க வேணும்

குருதை முக மண்டபத்தில

கூடியிருக்க வேணும்!''

ப்ரமிளாவா இதையெல்லாம் பேசு கிறாள்!

''ஒதுங்குங்க ஒதுங்குங்க.''

கொஞ்ச நேரத்தில் ப்ரமிளா களைப் பவளாகி அவர்கள் கொடுத்த இளநீரைக் குடித்து விட்டு, மனோஜை முதன் முத லாகப் பார்த்தாள்.

''ப்ரமிளா?''

''மனோஜ்.''

சந்தோஷத்துடன், ''ஆர் யு ஓ.கே.?'' என்றான்.

''என்ன ஆச்சு?''

அவளைத் தனியாக அழைத்து மண்ட பத்தின் ஓரத்துக்குக் கொண்டு வந்து, ''ப்ரமிளா உனக்கு நடந்தது தெரியாது?''

''தெரியாது. இவாள்ளாம் யாரு? எதுக்கு இத்தனை கூட்டம்?''

பூசாரி சொற்பொழிவு போல பேசிக் கொண்டிருந்தார். ''முனீஸ்வரன் இடைச் சுட்டார். நாக்கில வேதாந்தம் எழுதினவன் ஒருமுறை சொன்னான், மண்டபத்தில்

---



''தடங்கலுக்கு வருந்தறதுக்குப் பதிலா வானொலி நிலையத்தினர் சந்தோஷப்பட்டாங்களா, ஆச்சர்யமா யிருக்கே!''

''ஆமா, தடங்கலினிடையே பாடல் சிறிது ஒலிபரப்பப்பட்டதற்காக மகிழ்ச்சி தெரிவிச்சுக்கிட்டாங்க!''

- முருகன்

வச்சுரு மண்டபத்தில வச்சுருன்னு. இப்ப தான் புரியுது. சாக்கிரதையாத் தூக்குங்கடா. முனி சுவாமி என்ன அழகாக இருக்காரு பாரு... என்ன தேஜஸ்! அம்மா நீங்க வூட்டுக்குப் போங்கம்மா. சாமி மலை ஏறிட்டார். இருப்பிடம் கண்டுபிடிச்சுக் கொடுத்துட்டாரு. அதுக்கு ஒரு கருவி நீங்க. இனி தொந்தரவு செய்ய மாட்டாரு!''

''இனிமே வருவாரா?''

''அதான் வந்து சேர்ந்துட்டாரே!''

நடேச பண்டிதர் வீட்டிலிருந்து மர பெஞ்சுகள் போட்டு இணைக்கப்பட்டு, மண்டபத்திலிருந்து ஒரு தாற்காலிக பாலம் அமைக்கப்பட்டு ப்ரமிளாவை ஜாக்கிரதையாக நடத்தினார்கள்.

மனோஜ், அந்தச் சிலை, மண்டப நடுவே சுமார் மூன்று அடி உயரத்துக்கு நிற்பதைப் பார்த்தான். தீப்பந்த வெளிச்சத்தில் அந்தப் புன்னகை உதடுகள் அசைவது போல ஒருகணம் தெரிந்தது. நிச்சயமாக! மனோஜ் பூசாரி கொடுத்த குங்குமத்தை வாங்கி நெற்றியில் இட்டுக் கொண்டான்.

வீட்டுக்குத் திரும்பிய பின் ப்ரமிளா சுத்தமாக விஸ்தாரமாக மறுமுறை குளித்தாள். நித்யா கொடுத்த தேனீரை அருந்தினாள். புடைவை மாற்றிக் கொண்டு, பழையபடி நைட் ஷர்ட் போட்டுக் கொண்டாள்.

''ஆச்சா?''

''என்ன?''

''எல்லாம். ஆவேசம், சாமி!''

''என்ன சொல்ற மனோஜ்?''

''ப்ரமிளா ஆர் யு ஷ்யூர்? உனக்கு நடந்தது... நீ நடந்தது எதுவும் தெரியாது?''

''தெரியாது மனோஜ். என்ன பேச நீங்க நீங்க!''

''பாசாங்கு பண்ணாதே... ப்ளீஸ்... எனக்குப் பைத்தியம் பிடிச்சுடும்!''

''என்ன சொல்றே?''

நித்யா ''அவளைப் போட்டுக் குழப்பாதீங்க மனோஜ். நான் சொன்னேன் இல்லை அது அவ இல்லை.''

''எது?''

''ப்ரமிளா நீ சாயங்காலம் ஊருக்கு வெளியே வந்து ஒரு மண்டபத்துக்குப் போயி ஒரு சிலை இருக்கிற இடத்தைக் காட்டினது ஞாபகமில்லை?''

''ஞாபகமில்லை மனோஜ். காட் ப்ராமிஸ்!''

நித்யாவை கையாலாகாத்தனத்துடன் பார்த்தான். அவள் ''விட்டுருங்க'' என்றாள்.



''வர வர எதெதுக்கு 'வாழ்த்துப் போஸ்ட்டர்' அடிக்கிறதுன்னே விவஸ்தையில்லாமப் போயிடுச்சு!''

''ஏன்? என்னாச்சு!?''

''வெற்றிகரமாக 101வது புதுச் செருப்பைக் கல்யாண மண்டபத்திலிருந்து கடத்திக் கொண்டு வரும் மாடசாமியை வாழ்த்தி வரவேற்கிறோம்'னு அச்சடிச்சுருக்காங்களே!''

- ஸ்வீட் ரவி

''இனிமே வராதே?''

''எப்படிச் சொல்ல முடியும்?'' என்றாள் நித்யா.

படுத்துக் கொண்டிருக்கும் போது, பின்னிரவில் கனவு கண்டான். அருகில் மனைவி இருக்கிறாளா என்று தொட்டுப் பார்த்தான். அவள் தூக்கத்திலிருந்து எழுந்து அவன் கழுத்தை வளைத்துத் தன்பால் இழுத்துக் கொண்டு ஒரு காதைப் பிடித்தாள். வலித்தது. சற்று பயமாக இருந்தது.

''இப்ப நீ ப்ரமிளாவா இல்லை சாமியா?''

''என்ன சொல்றீங்க மனோஜ்? ப்ரமிளாதான் நான்.''

''உங்கப்பா நாளைக்கு வரப் போறதாச் செய்தி கொடுத்திருக்கார்.''

''எதுக்கு?''

''உன்னைக் கூட்டிப் போறதுக்கு.''

''நான் முனீஸ்வரனை விட்டு எங்கேயும் போக மாட்டேன்!''

''ராகவா! மறுபடியும் முனீஸ்வரனா!''

''டோட்டு நாய் எப்படி வந்ததாம்!''

''அய்யோ என் நண்பனே ஷண்பேக்கரா! எங்கடா போய்ட்ட, என்னை இந்தப் பைத்தியக்கார தேசத்தில் தனியா விட்டுட்டு! என்ன ஒரு பரிபூர்ண குழப்பம்!''

காலை எழுந்து பல் தேய்த்து விட்டு மாடி வழியாக எட்டிப் பார்த்ததில், நூற்றுக் கணக்கான பேர் வெகு வெகு என்று ஒரே திசை நோக்கி நடந்து கொண்டிருந்ததைப் பார்த்தான்.

(தொடரும்)

## போட்டிக் கதை - 15

# இடம்

எப்படிக் கூட்டிக் கழித்தாலும் செல வினங்களும், வரப் போகிற சம்பளமும் எட்டிப் பிடிக்க முடியாத இடைவெளியில் இருந்தன.

வெறுப்புடன் பேனாவைக் கீழே வைத்தேன்.

ஜன்னல் வழியே வெளியே வெறித் தேன். எவ்வளவு சம்பளம் வந்து என்ன.... இந்த சின்னக் குடும்பத்தை நிர்வகிக்கவே திணறுகிறது. இதே என் சின்ன வயதில்.... ஒரு நாள் டிபன் தவறியிருக்குமா! நொறுக்குத் தீனி எப்போதும் எவர்சில்வர் சம்படத்தில்.... மாதந் தவறாமல் சிவாஜி சினிமா.

அப்பாவோ, அம்மாவோ ஒரு நாளும் அலுத்துக் கொண்டதில்லை. எப்படிச் சமா ளிக்கப் போகிறோம் என்று திணறிய தாகவே தெரியவில்லை. என்னை.... கந்தரை.... மாலதியை.... ரகுவைப் படிக்க வைத்து, துணி வாங்கி, சோறு போட்டு... இப்போது பாபு ஒருத்தனைப் படிக்க வைக்கவே விழி பிதுங்குகிறது.

''என்னங்க....'' என்றபடி புவனா வந்தாள்.

''இங்கே என்ன பண்ணிக்கிட்டு இருக் கீங்க? பாபு யூனிஃபார்ம் கிழிஞ்சு போச்சு. வாங்கணும்னு சொன்னது ஞாபகமில் லையா?''

பேசாமல் அவளை வெறித்தேன்.

''..என்னது இது? ஓ... பட்ஜெட்டா.... எப்பவும் நம்ம வீட்டுல அது பற்றாக் குறைதானே...''

சிரிப்புடன் சொன்னவளின் மீது எரிச் சல் வந்தது.

''சிரிக்காதே... எப்படிச் சமாளிக்கிற துன்னு ஐடியா கொடுக்க முடியலேன்னா லும் கேலி மட்டும் சுலபமா வருது...'' என்றேன் இயலாமையின் வெடிப்புடன்.

நோட்டை மூடினாள். பேனாவை என் கையிலிருந்து சுவாதீனமாய் உருவி மூடி வைத்தாள்.

''இது என்ன புதுசா? மாசா மாசம் நாம பேசி அலுத்த விஷயம்தானே... எல்லாச் செலவும் அவசியம். இதுல எதை விட முடியுது? இத்தனைக்கும் நாம வெட்டிச் செலவு எதுவுமே பண்ற தில்லே....''

''அதுக்குள்ளே மறுபடி என்ன யூனிஃபார்ம்?''

''பாவம்... அவனுக்கு ரெண்டு செட் தான் வாங்கினோம். ஸ்கூல்ல மூணு செட் வாங்கச் சொன்னாங்க...''

''பொறுப்பே இல்லை... ஸ்கூல் லேர்ந்து வந்தாக் கழற்றி வைக்கணும். உனக்கும் அதைக் கவனிக்க நேரம் எங்கே இருக்கு? பொழுது போனா டீவி.... பாழாப் போன டீவியினாலதான் பாதித் தலைவலி.''

''என்னாச்சு... இன்னைக்கு உங்க ளுக்கு.... சள்ளுன்னு விழுறீங்க?'' என்றாள் வியப்புடன்.

நிஜமாகவே இவளுக்கு அக்கறையோ, கவலையோ இல்லையா? என்னடா.... வருமானம் இவ்வளவுதான்... இவ்வளவு செலவிருக்கே! எப்படி ஒருவன் சமாளிப் பான் என்கிற எண்ணமே இல்லாமல், யாரோ கொடுப்பான் நமக்கேன் வருத்தம் என்கிற ரீதியில் துளி முகஞ் சிணுங்காமல் இருக்கிறாளே!

''என்ன இன்னைக்கு ஜவுளிக் கடைக்குப் போகிறோமா இல்லையா?'' என்றாள் பொறுமை இழந்த குரலில்.

பேசாமல் எழுந்தேன். சட்டையை மாட்டிக் கொண்டேன். ஜவுளிக் கடைக்குக் கூட வரப் போகிற நினைப்பில் தலை வகிடு பிரித்துச் சீவிக் கொள்ள ஆரம்பித் தாள். எதுவும் சொல்லாமல் நடந்து வாச லுக்குப் போனேன்.

''அப்பா.... நானும் வரேன்...'' என் றான் பாபு.

''...அம்மாகிட்ட சொல்லு..... ஒரு ஃப்ரெண்டு வீட்டுக்குப் போறார் அப்பான்னு...''

''நானு.....''

ரிஷபன்



''போடா....'' என்றேன்.

வெளிப்பட்டு வீதியில் நடந்தேன். இப்படியே வீட்டுக்குத் திரும்பி வராமல் எங்கேயாவது போய் விடலாமா என்று கூட அபத்தமாகத் தோன்றியது. சட்டைப் பாக்கெட்டில் நல்ல வேளையாக பர்ஸ் இருந்தது; அதில் அதிர்ஷ்டவசமாகப் பண மும் இருந்தது.

அப்பாவைப் போய்ப் பார்த்தால் என்ன? ஒரு மணி நேரம்தான்..... கிராமத் துக்குப் போய் விடலாம். புவனா தேடு வாளா? இன்று ஞாயிறு தானே.... உடனே திரும்பி விடலாம். அரை நாள் இல்லாமல் போனால் என்ன குடி முழுகப்போகிறது. பாபுதான் சொல்லியிருப்பானே... நண்பன் வீட்டுக்குப் போனதாக.

அடுத்த பத்து நிமிடங்களில் கிராமத் துக்குச் செல்லும் பஸ்ஸில் இருந்தேன்.

''வாடா...'' என்றார் அப்பா. பார்வை என் பின்னால் தேடி மீண்டது.

''..பாபு வரலியா?''

''இல்லைப்பா.... நான் மட்டும்தான் வந்தேன்.''

''....கை, கால் கழுவிக்கிட்டு வா. சாப் பிடலாம்.''

அம்மாவும் தன் பங்குக்கு ஒரு முறை புவனா, பாபு பற்றிக் கேட்டாள். அப்பா வழக்கம் போல் ஆபீஸ் பற்றி.... ஸ்ட்ரைக் பற்றி... பஸ் பிரச்னை பற்றிக் கேட்டார்.

பதில் சொன்னவாறே சாப்பிட்டேன்.

''...மாலதி லெட்டர் போட்டா... சௌக்கியமா இருக்காளாம். சுந்தருக்கு ஒரு இடம் வந்திருக்கு... உன்னைப் பார்க்க வர ணும்னு அப்பா சொல்லிக்கிட்டு இருந் தார்...''

''போக்கு போ. அவன் நிம்மதியும் போகப் போவுதா?'' என்றேன்.

''ஏண்டா... இப்ப உனக்கு என்ன குறை?''

''என்னம்மா.... கல்யாணம்னா..... ஏதோ சின்ன வயசுல சந்தோஷமா இருந் தது. மண்டபம் முழுக்க உறவினர்கள். புது டிரஸ்.... பலகாரம்னு..... இப்ப அதோட இன்னொரு பக்கம் புரிய, ஞானம் வந்தி ருக்கம்மா... கல்யாணம் பியர் வேஸ்ட்.....'' என்றேன்.

''என்ன சொல்றான்.... இவன்?'' என் றாள் அம்மா.

''என்னடா... அதுக்குள்ளே அலுப்பு?'' என்றார் அப்பா.

''இல்லப்பா... உண்மையைச் சொல்றதுக்கு என்னை மன்னிச்சுருங்க. உங்க காலத்துல... துளி பாரம் எங்க மேல விழுந்திருக்குமா. இல்லே, நீங்கதான் நிறைஞ்சீங்களா. எவ்வளவு கலபமா வாழ்க்கை போச்சு... இப்ப... ச்சே.... என்ன லைஃப்? எப்பப் பார் கடன் பிரச்னைன்னு....'' என்றேன் அழுத்தமான வெறுப்புடன்.

அப்பா அம்மாவைப் பார்த்தார். அம்மா மௌனமாகச் சிரித்தாள்.

''குடும்பம்னா அப்படித்தான்டா... விரக்திக்கு ஒரு தடவை அடிமை ஆயிட்டா, அப்புறம் நிரந்தரமா அது ஆட்சி செய்யும்... புரிஞ்சுதா?'' என்றார்.

''இல்லைப்பா... என்னால சகிக்கக் கவே முடியலே....''

''சரி... கொஞ்ச நேரம் படுத்துக்கோ, சாயங்காலமாப் போகலாம்....''

''சொல்லாமே வந்துட்டேன்... காணோம்னு தேடுவா... இப்பவே கிளம்பறேன்....'' என்றேன்.

''இந்தா....'' என்றாள் அம்மா ஒரு கைப் பையை நீட்டி.

''...என்னது?''

''குழந்தைக்குக் கொண்டு போய்க் கொடுடா....''

''அதெல்லாம் ஒண்ணும் வேணாம்....''

''சர்தான் எடுத்துண்டு போ.... பாவம், அதுக்குப் பிடிக்குமேன்னு கைமுறுக்குச் சுத்தினேன்....''

அப்பா பையை வாங்கிக் கொண்டார்.

''பஸ் ஸ்டாப் வரை போயிட்டு வரேன்.....'' என்றார் அம்மாவிடம்.

வயல் வெளி வழியே நடக்க வேண்டும். தொலைவில் தெரிந்த சிவன் கோவில்.... புறாக்களின் அணி... குறுக்கிட்ட கால்வாய்... மனசு மெல்ல லயித்தது.

''உங்கம்மா கல்யாணமான புதுசுல எவ்வளவு நகை கொண்டு வந்தா தெரியுமா?'' என்றார் அப்பா மெல்ல.

''எ..... என்ன?'' என்றேன் திடுக்கிட்டு.

''ம்..... அவ்வளவும் இப்ப எங்கே போச்சு? குறையாச் சொல்லலேடா. எங்க காலத்துலேயும் பிரச்னைகள்தான். ஆனா பாவம் பிஞ்சுகள் நீங்கள்.... உங்க கிட்டே காட்டக் கூடாதுன்னு விட்டுட்டோம். என் சம்பளத்துல எவ்வளவுதான் சமாளிக்கிறது. ஆனா ஒன்னே ஒண்ணு.... உங்கம்மாவைத்தான் சொல்லணும். அவ மட்டும் தைரியம் கொடுக்கலேன்னா எப்பவோ ஒடிஞ்சிருப்பேன்....''

பேசாமல் கேட்டுக் கொண்டு வந்தேன்.

''பிரச்னையைக் கண்டு பயந்து ஓடறது... கோழைத்தனம்டா. எதிர் கொண்டு ஜெயிக்கறதுதான் புத்திசாலித்தனம். எனக்கு அம்மா துணை நின்னா. நீ உன் மனைவிக்குத் துணை நில்லு... வாழ்க்கையை ஜெயி. நீ கோழையா இருக்க மாட்டே... இருக்க முடியாது.... உங்கம்மா ரத்தம்தானே உன் உடம்புலயும் ஓடறது....'' என்றார் இதமான குரலில்.

உச்சிக்கால பூஜையை அறிவிக்க, சிவன் கோவில் மணி ஒலித்தது. எல்லாவற்றையும் கடந்தவன் கூட உலக நியதிக்கேற்பக் கட்டுப்படுகிறான்.

''மனசு திடமா இருந்தாத்தான்.... சம்சாரிக்கும் சரி, சன்யாசிக்கும் சரி... பலம்... அப்பத்தான் எந்தச் சூழ்நிலையையும் உன்னால எதிர் கொண்டு சமாளிக்க முடியும். இதுலேயே தகராறுன்னா.... இதை விட்டுப் போனா மட்டும்... என்ன செய்ய முடியும்?''

பையை என் கையில் திணித்தார். பஸ்ஸில் ஏற்றிக் கையாட்டினார். கையசைத்தவனின் மனத்தில் உறுதி வந்திருந்தது.



''கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி
எனக்குப் பொன்னாடை போர்த்
திட்டுப் போனவரைச் சீக்கிரம் கண்டு
பிடிச்சுக் கூட்டிட்டு வாங்க!''

''ஏன் தலைவரே?''

''அவர்தான் பொன்னாடை
போர்த்தும் போது நேக்கா என் பர்ஸை
அடிச்சுட்டுப் போயிருக்கணும்!''

- ஞா. ஞானமுத்து

# அன்புள்ள அம்மு...

வஸந்திக்குக் கல்யாணம் பண்ணிக் கண்குளிரப் பார்த்து விடுவது என்று அவள் அப்பா அம்மா முடிவெடுத்தார்கள். வஸந்திக்கும் சம்மதம்தான். ஆனால் பெண் பார்க்கும் படலத்துக்குத் தன்னை உட்படுத்திக் கொள்ள அவளுக்குத் துளியும் விருப்பமில்லை!

வஸந்தியின் பெற்றோர் சம்பிரதாயப்படி ஜாதகம் கொடுத்து, வாங்கியிருக்கிறார்கள். பொருந்திப் போகவே, அடுத்த கட்டமாக மாப்பிள்ளைப் பையனின் போட்டோ கேட்டு வாங்கியிருக்கிறார்கள். பையன் வீட்டில் வஸந்தியின் போட்டோ வேண்டும் என்று கேட்கவே அவளை நல்ல விதமாக, கலர் போட்டோ எடுத்து அனுப்ப முனைந்திருக்கிறார்கள்.

இதுவே வஸந்திக்குப் பிடிக்கவில்லை; ஒரேயடியாக முணுமுணுத்தபடி அரை மனத்துடன் சம்மதித்திருக்கிறாள்.

போட்டோவைப் பார்த்துவிட்டுப் பிடித்துப் போக, மாப்பிள்ளை வீட்டார், 'பெண் பார்க்க என்றைக்கு வரலாம்?' என்று கேட்டிருக்கிறார்கள்.

தன்னைக் காட்சிப் பொருள் ஆக்கி வேடிக்கை பார்ப்பார்கள் என்று வஸந்திக்கு ஒரே பயம். 'என்னைச் சிறுமைப் படுத்துகிற மாதிரி இருக்கிறது..... நான் இதற்கெல்லாம் உடன்பட்டுத்தான் ஆகணுமா அக்கா...?' என்று என்னிடம் குமுறினாள்.

வஸந்தி எப்படி வளர்ந்தவள் என்று உனக்குத் தெரியும் அம்மு. சர்வ சுதந்திரமாக, நவீன சிந்தனைகளுடன் வளர்ந்திருக்கிறாள். அவள் அப்பா அம்மாவும் அதைக் குறித்து பெருமைப் படுகிறார்கள்.

ஆனால் கல்யாணம் என்று வரும்போது, அதே பெற்றோர்கள் சம்பிரதாயப்படியே ஜாதகப் பரிவர்த்தனை, பெண் பார்த்தல் என்று எச்சரிக்கையுடன் ஒவ்வொரு கட்டமாக எதிர் கொள்ள வேண்டியுள்ளது. இரு வீட்டாரும் மனமொப்பினால் ஜாதகப் பரிவர்த்தனையை வேண்டுமானால் தவிர்க்கலாம். ஆனால் பெண்ணும் பிள்ளையும் பார்த்துக் கொள்ளத்தானே வேண்டும்!

''ஒரு பொது இடத்தில் நாங்கள் சந்தித்துப் பேசிக் கொள்கிறோம்'' என்று வஸந்தி சொன்னது மாப்பிள்ளை வீட்டாருக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. வஸந்தியின் பெற்றோருக்கோ இந்த 'வரனை' விடுவதில் இஷ்டமில்லை. ''பையனை நாங்கள் பார்த்துப் பேசினோம். நல்ல மாதிரியாகத் தெரிகிறான். அவன் அப்பா அம்மாவும் மிகவும் கண்ணியமாகத்தான் பேசுகிறார்கள். வஸந்தி தன் பிடிவாதத்தால் காரியத்தைக் கெடுக்கிறாள்'' என்று என்னிடம் வருத்தப் பட்டார்கள். வஸந்தியோ ''அப்பாவும் அம்மாவும் திடீரென்று பத்தாம்பசலித்தனமாகப் பேசுகிறார்கள்'' என்று கோபப்பட்டாள்.

சமுதாய மாற்றங்கள் இரவோடு இரவாக நடந்துவிடாது. படித்த, முற்போக்கு சிந்தனையுடைய ஒரு பெண்ணுக்கு, தான் பெண் பார்க்கப் படுவது சங்கடத்தை அளிக்கும்-ஒப்புக்கொள்கிறேன். அவளைப் பார்க்க வரும் இன்றைய நாகரிக இளைஞனுக்கும் அதே போன்ற சங்கடம் இருக்கத்தானே செய்யும்? இதை வஸந்தியிடம் எடுத்துச் சொன்னேன். 'காதலித்துத் திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பு அமையாத போது இந்தத் தவிர்க்க முடியாத சங்கடத்துக்கு உள்ளாகத்தான் வேண்டும்' என்றேன்.

வஸந்தி ஒருவாறு ஒப்புக் கொண்டாள். அவள் அப்பா அம்மாவுக்கு ஏகப்பட்ட சந்தோஷம். பெண் பார்த்தல் முடிந்து, கல்யாணமும் நிச்சயமாகிவிட்டது.

எனக்குப் பரம திருப்தி. 'சந்தோஷத்தில் இன்னும் ஒரு சுற்றுப் பருத்து விடாதே' என்று அத்தான் அவ்வப்போது எச்சரித்துக் கொண்டிருக்கிறார்!

உன் பிரியமுள்ள,

— அலமு



# பரிசு பெற்ற சமுதாயப் பார்வைகள்

## பொன்விழா நாடகம் - கவிதைப் போட்டிகள்

தமிழ் நாடகங்கள், தங்களின் பழைய முகங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றிக் கொண்டு, முற்றிலுமானதொரு புதிய அடையாளத்துடன் நவீனப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்பதற்கு, நமது பொன் விழாப் போட்டியில் பரிசு பெற்ற இரண்டு நாடகங்களுமே ஓர் உதாரணம். இரண்டுமே, தனிமனிதர்களின் பிரச்னைகளையோ அல்லது அவன் சார்ந்த சிலரின் பிரச்னைகளையோ சொல்லாமல் - முற்றிலுமாக விடுபட்டு - நம் அனைவருக்குமே ஒட்டு மொத்தமாகவுள்ள பிரச்னைகளைச் சொல்லியிருப்பது, மேலும் சிறப்புப் பெறுகின்றனவாக அமைகின்றன.

இரண்டுமே, குறுகிய காலத்ததான நமது சுதந்திர அமைப்பில், மிக வேகமாகப் படர்ந்துவிட்ட சமூகக்களைகளைத் தாக்கும் குத்தீட்டிகளாகத் திகழ்கின்றன. படிக்கும் ஒவ்வொருவரையுமே பாத்திரமாகக் கொண்டுள்ளதால், ஒட்டுமொத்தமாக அனைவரையும் ஒரு கணமேனும் சிந்திக்க வைக்கின்றன.

முதல் பரிசு பெற்ற ''சுழற்சி''யை எழுதிய இரா. இராஜேந்திரன் ஏற்கெனவே எட்டு மேடை நாடகங்கள் எழுதியிருக்கிறார். எம்.எஸ்ஸி, பி.எட் படித்து விட்டு நெய்வேலி நிலக்கரி நிறுவனத்தில் பணி புரியும் இவரது ''சலனம்'' என்ற நாடகம், பொதுத்துறை நிறுவனங்களுக்கு இடையிலான நாடகப் போட்டியில் இரண்டாவது பரிசைப் பெற்றதோடு, மூன்று தனிப் பரிசுகளையும் பெற்றிருக்கிறது. கூடவே, கையெழுத்துப் பத்திரிகைகளிலும் சிறு பத்திரிகைகளிலும் சில சிறுகதைகளையும் எழுதியிருக்கிறார்.

இருப்பினும், ''பத்திரிகையில் பிரசுரமாவதற்காக நான் எழுதிய முதல் நாடகம் 'சுழற்சி' தான்'' என்கிறார். இந்த இருபத்தேழு வயது இளைஞரின் எழுத்துலகப் பிரவேசத்திற்கு ஊக்கமளித்து உரமூட்டியவர் மறைந்த இவரது தந்தையே என்கிறார்.

இரா. இராஜேந்திரன்



பி. உதயக்குமார்



இரண்டாவது பரிசு பெற்ற 'க்யூ'வை எழுதிய பி. உதயக்குமாருக்கு இருபத்தாறு வயதுதான். இருப்பினும் இவர் விட்டு வைக்காத துறைகளே இல்லையோ என்கிற அளவுக்குப் பல துறைகளிலும் ஈடுபாடு.

84-ல் விகடன் மாணவப் பத்திரிகையாளராக எழுத்துலகில் பிரவேசித்த இவர், அதே ஆண்டில் குமுதம் நடத்திய சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசைத் தட்டிச் சென்றிருக்கிறார். அடுத்த ஆண்டில் 'இன்னொரு வானம்' என்கிற தமது கவிதைத் தொகுதியைப் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்.

இப்போது, ஸ்கை விளம்பர நிறுவனத்தின் உரிமையாளராக இருக்கும் இவர், பல விளம்பர மற்றும் டாகுமெண்டரிப் படங்களுக்கு ஸ்கிரிப்ட் எழுதி நடித்தும் இருக்கிறார். டாக்டர் ருத்ரனின் 'முத்ரா' நாடகக் குழு முதல் பல குழு நாடகங்களில்



வி. வேங்கடகிருஷ்ணன்



பிருந்தாசாரதி

நடித்ததோடு 'இணைகோடுகள்' என்று சொந்தமாகவே ஒரு நாடகக் குழுவையும் ஏற்படுத்தி நடித்தும் இயக்கியும் இருக்கிறார். இவை மட்டும் தானா? நகைகளுக்கான டிசைன்கள் வரைவதிலிருந்து, கர்நாடக சங்கீதம் வரை எல்லாவற்றிலுமே ஈடுபாடு இவருக்கு.

தற்சமயம் கல்விக்கான வீடியோ படங்களைத் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் இவர், அமெரிக்காவின் ஃபோர்ட் ஃபவுண்டேஷன் உதவியுடன் பரிசையில் ஆரம்பிக்கப்படவிருக்கும் நாடக வளர்ச்சிக்கான பயிற்சி நிறுவனத்திற்குப் பணம் திரட்டுவதிலும் ஈடுபட்டிருக்கிறார்!

நாடகத்தில் இவருக்கு இரண்டாம் பரிசுதான் என்றாலும் சுறுசுறுப்பில் முதல் பரிசைத் தட்டிச் செல்கிறார் என்பதில் ஐயமேயில்லை!

கவிதைப் போட்டியில் பரிசு பெற்றவரிடையேயும் சமுதாயப் பார்வையே ஓங்கி இருக்கக் காண்கிறோம்.

புதுக் கவிதைப் போட்டியில் முதல் பரிசுக் கவிதையான ''ஞானவெளியில்.....'' எழுதிய வி. வேங்கடகிருஷ்ணன் (தத்துவப்பித்தன்) பணிபுரிவது ரப்பர் வியாபார நிறுவனமொன்றில்தான் என்றாலும், பார்வையும் இலட்சியமும் வேறு.

''பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டு விளங்கும் மாறாப் பேருண்மையைக் காணத் துடிக்கும் எனது வேட்கையின் விளைவுகளே எனது கவிதைகளும் கட்டுரைகளும்....'' என்று தம்மை அறிமுகப் படுத்திக் கொள்கிறார் இந்த முப்பத்தொரு வயது இளைஞர்.

இவர் படித்தது பள்ளியிறுதி வகுப்பு வரைதான் என்றாலும் படித்துக் கொண்டிருப்பது, புரிந்து கொள்ள முடியாத இவ்வுலகத்தின் புதிர்களை. இருப்பினும் சுற்றிலுமிருக்கும் உலக முரண்பாடுகளின் தாக்குதலிலிருந்து தம்மால் தப்பிக்க முடியவில்லையே என்று ஏங்குகிறார். இவரது ஏக்கம் நீங்கித் தமது தேடுதலில் வெற்றி பெற நமது வாழ்த்துக்கள்.

''நவீன நாடுகடத்தல்'' எழுதி, இரண்டாம் பரிசு பெற்ற என். சுப்ரமணியன் (பிருந்தாசாரதி) படித்தது பி.எஸ்ஸி பௌதிகமும் எம்.ஏ. தமிழ் இலக்கியமும் என்றாலும் செய்து கொண்டிருப்பது சோனுக்குத் தகுந்தபடியான வியாபாரம். ஆயினும் கவனமெல்லாம் படைப்பிலக்கியத்தின் பக்கம்தான்.

படிக்கும் காலத்திலேயே ஏராளமான கவியரங்குகளில் பங்கு கொண்டு, ஏராளமான பரிசுகளை வாங்கிக் குவித்த இவர், இதுவரை ஏழு சிறுகதைகளையும் எழுதியிருக்கிறார்.

இலக்கிய வேட்கையின் காரணமாக நண்பர்களுடன் சேர்ந்து 'இலக்கியச் சந்திப்பு' என்ற அமைப்பை உருவாக்கிக் கொண்டிருக்கும் இவர், 'கனவுகளை நனவாக்கும் கம்ப்யூட்டர்' என்னும் தொலைக் காட்சித் தொடரை இயக்கிவரும் ஜே.டி ஜெர்ரியிடம் உதவி இயக்குனராகச் சேர்ந்திருக்கிறார். அதிலும் சாதனைகள் புரிய நமது வாழ்த்துக்கள்.

''ஈரம்'' கவிதையை மரபு வழியில் எழுதி முதல் பரிசு பெற்ற முத்து. எத்திராசன் முதலில் இடைநிலை ஆசிரியராகச் சென்னையில் தமது வாழ்க்கையைத் துவங்கினார். பின் படிப்படியாகப் படித்து முதுகலைப் பட்டம் பெற்று இப்போது முதுநிலைத் தமிழாசிரியராக உயர்ந்திருக்கிறார். மனைவியும் ஓர் ஆசிரியைதான். மூன்று மகன்கள்.


முத்து எத்திராசன்


வ. சிவகுமார்

பதினொரு நூல்களுக்கு ஆசிரியரான இவர், இப்போது தாராபுரம் கோயில் கல்வெட்டுக்களைப் படியெடுத்து வந்து, நூலாக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறார். ஓவியப் பயிற்சியையும் விட்டு வைக்கவில்லை. Free Hand outline, Geometrical Drawing ஆகிய தேர்வுகளிலும் வெற்றி பெற்றிருக்கிறார்.

அடுத்த ஆண்டு, தமது ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெறவிருக்கும் இவர், தாம் ஓய்வுபெறப் போவது ஆசிரியப் பணியிலிருந்துதானே தவிர, இலக்கியப் பணியிலிருந்து அல்ல என்பதுபோல், இப்போது சென்னைப் பல்கலைக் கழகத்தில் 'கம்பனில் (இராமாயணத்தில்) மாலைப் பொழுது' என்ற தலைப்பில் பிஎச்.டி. செய்து கொண்டிருக்கிறார்!

''படிக்கக் கிழிக்க வேண்டாம்'' என்று மரபுக் கவிதை எழுதி இரண்டாம் பரிசு பெற்ற வ. சிவகுமார், தற்போது கோவை தொழில் நுட்பக் கல்லூரியில் எம்.எஸ்ஸி (Applied Chemistry) முதலாண்டு படித்துக் கொண்டிருக்கிறார்.

இவரது குடும்பமே தமிழ்ப் பற்று மிக்க குடும்பம் என்று பெருமைப்படும் இவரது கவியார்வத்துக்கு வித்திட்டவர் தமது சித்தப்பா சுந்தரபாரதிதான் என்கிறார். ''கல்லூரி அளவில் நிறையக் கவிதைகள் எழுதியிருந்தாலும் பத்திரிகையில் பிரசுரமாவதென்பது இதுதான் எனது முதல் கவிதை. அதுவும் பரிசுக் கவிதையாகப் பிரசுரமானதென்பது மிகுந்த உற்சாகத்தையும் மேலும் மேலும் சாதிக்க வேண்டும் என்ற வேகத்தையும் கொடுக்கிறது'' என்கிறார். அவரது எதிர்காலச் சாதனைக்கு நம் வாழ்த்துக்கள்.

பரிசு பெற்ற அறுவருக்கு மட்டும்தான் நமது வாழ்த்துக்கள் என்பதல்ல; கல்கி பொன் விழா நாடகம், கவிதைப் போட்டிகளில் பங்கு கொண்ட பல்லாயிரக் கணக்கான வாசககர்களுக்கும் நமது வாழ்த்துக்கள். இனிவரும் போட்டிகளில் அவர்களும் வெற்றி பெறுவார்கள் என்று வாழ்த்துகிறோம்.

- எஸ். ஐ.

# சிவகாமியின் சபதம்

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

## வேஷதாரி

வலது கால் எலும்பு முறிந்து எழுந்திருக்க முடியாதவராய்த் தரையில் விழுந்து கிடந்த ஆயனரண்டையில் வந்து புலிகேசிச் சக்கரவர்த்தி உட்கார்ந்தார்.

''மகா சிற்பியே! மன்னிக்க வேண்டும். உம்முடைய அற்புதச் சிலை வடிவங்களைக் காப்பாற்றுவதற்காகத்தான் இவ்வளவு விரைந்து வந்தேன். நீர் மூர்ச்சை தெளியும் வரையில் கூடக் காத்திராமல், உம்மைக் குதிரையின் மேல் வைத்துக் கட்டிக் கொணர்ந்தேன். அப்படியும் உம்முடைய சிலை சிலவற்றிற்கு ஆபத்து வந்து விட்டது. மன்னியுங்கள். ஏதோ மீதமுள்ளவையாவது பிழைத்தனவே என்று சந்தோஷப்படுங்கள்!'' என்றார் புலிகேசி மன்னர்.

ஆயனர் அவருடைய முகத்தை ஆவலுடன் உற்றுப் பார்த்தார். அவருடைய உள்ளத்தில் ஏதோ ஒரு சந்தேகத்தின் நிழல் படர்ந்திருந்தது. இதென்ன விந்தை? வாதாபிச் சக்கரவர்த்தியா இவ்வளவு நன்றாகத் தமிழ் பேசுகிறார்? கொடுமைக்கும் குரூரத்துக்கும் பெயர் போன புலிகேசி மன்னரா தம் அருகில் உட்கார்ந்து இவ்வளவு சாவதானமாக வார்த்தையாடுகிறார்?

இப்படிப்பட்ட நல்ல சுபாவமுடைய மன்னர் சிற்பிகளைக் காலையும் கையையும் வெட்டிப் போடும்படி கட்டளையிட்டிருப்பாரா? சிலைகளையும் சிற்பங்களையும் உடைத்துப் போட ஆக்ஞையிட்டிருப்பாரா? - அந்தக் கடுவம் பூனை முகத்துத் தளபதி அப்போது சொன்னது உண்மையா? அல்லது இனிய தமிழ் பாஷையில் இதோ சக்கரவர்த்தியே பேசுவது உண்மையா?

சட்டென்று ஆயனருக்குச் சிவகாமியின் நினைவு வந்தது! ஐயோ! அவள் என்ன ஆனாள்? மற்றதையெல்லாம் மறந்து, ''பிரபு! என் குமாரி சிவகாமியை உங்கள் வீரர்கள் பிடித்துக் கொண்டு போனார்கள். ஐயோ! அவளைக் காப்பாற்றுங்கள். சிவகாமியை மறந்து விட்டு இந்தப் பாவி சிலைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேனே?'' என்று ஆயனர் அலறினார்.

அப்போது புலிகேசி, ''ஆயனரே! கடவுள் அருளால் உம் மகளுக்கு ஆபத்து ஒன்றும் வராது. பத்திரமாக அவள் வாதாபி போய்ச் சேருவாள்!'' என்றார்.

''ஐயோ! என்ன சொன்னீர்கள்? சிவகாமி வாதாபிக்குப் போகிறாளா? அப்படியானால் இந்தப் பாவி இங்கே எதற்காக இருக்கிறேன்? என்னையும் கொண்டு போய் விடுங்கள்!''

''அப்படித்தான் முதலில் எண்ணினேன். ஆனால், உம்முடைய காலை ஒடித்துக் கொண்டு விட்டீரே? இந்த நிலைமையில் சிறிது நகர்ந்தாலும் உமது உயிருக்கு ஆபத்து வருமே...!''

''பிரபு! அப்படியானால், என் உயிரைப் பற்றித் தங்களுக்குக் கவலை இருந்தால், என் மகளை இங்கே அனுப்பி வையுங்கள்!''

''அது இயலாத காரியம்...''

''ஆ! இதென்ன தாங்களும் ஒரு சக்கரவர்த்தியா? சிற்பிகளின் கால் கையை வெட்டவும், சிலைகளை உடைக்கவும், கன்னிப் பெண்களைச் சிறைப்பிடிக்கவும் கட்டளை போடத்தான் உங்களால் முடியுமா?'' என்று ஆயனர் ஆவேசமான குரலில் கத்தினார்.

அப்போது புலிகேசி, ''ஆயனரே! உம்மிடம் ஒரு முக்கிய விஷயம் சொல்ல வேண்டும். தயவுசெய்து உம்முடைய சகோதரியை உள்ளே போகச் சொல்லும்!'' என்று சாந்தமான குரலில் கூறி, பக்கத்தில் சொல்ல முடியாத மனக்குழப்பத்தையும் பீதியையும் முகத்தில் பிரதிபலித்துக் கொண்டு நின்ற சிவகாமியின் அத்தையைச் சுட்டிக் காட்டினார்.

''பிரபு! சொல்லுங்கள்! என் சகோதரியின் காது செவிடு! இடி இடித்தாலும் கேளாது!''

''இருந்தாலும், அவளைப் போகச் சொல்லும்!'' என்றார் புலிகேசி.

ஆயனர் சமிக்ஞை காட்ட, அவருடைய சகோதரி முன்னை விட அதிகக் குழப்பத்துடன் உட்சென்றாள்.

புலிகேசி, ''ஆயனரே! நான் சொல்வதை நன்றாய் மனத்தில் வாங்கிக் கொண்டு விடை சொல்லும் : உம்முடைய குமாரி இப்போது வாதாபியை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறாள். ஒருவேளை நான் விரைந்து வேகமாகச் சென்றால், அவளைக் கண்டுபிடிக்கலாம். கண்டுபிடித்து, இவ்விடம் அனுப்பி வைத்தாலும் வைக்கலாம். ஆனால், இன்னொரு விஷயத்தையும் யோசியும், இதோ உம்முடைய அற்புத தெய்வீகச் சிலைகளை உடைத்தது போல், மாமல்லபுரத்து மகா சிற்பங்களையும் உடைத்தெறிவதற்காக ஒரு பெரும் படை போயிருக்கிறது. நான் போனால் அந்தப் படையைத் தடுக்கலாம். உம்முடைய மகளைக் கொண்டு வருவதற்காகப் போகட்டுமா? அல்லது மாமல்லபுரத்துச் சிற்பங்களைக் காப்பாற்றுவதற்காகப் போகட்டுமா?'' என்று கேட்ட போது, ஆயனரின் உள்ளத்தில் ஏற்கெனவே நிழல் போல் தோன்றிய சந்தேகம் வலுப்பட்டது.

இவ்வளவு நன்றாகத் தமிழ் பாஷை பேசுகிறவர் புலிகேசிச் சக்கரவர்த்திதானா? அவரை நன்றாக உற்றுப் பார்த்து, ''ஐயா! தாங்கள்... தாங்கள்...!'' என்று தயங்கினார்.

புலிகேசிச் சக்கரவர்த்தி உடனே தமது தலையிலிருந்த கிரீடத்தைக் கழற்றிக் கீழே வைத்தார்.

''ஆ! நாகநந்தி அடிகளா?'' என்ற வார்த்தைகள் ஆயனரின் வாயிலிருந்து வெளிவந்தன.

''ஆம்; ஆயனரே! அந்த ஏழை பிக்ஷுவேதான்!''

''சுவாமி! இதென்ன கோலம்?''

''ஆம்; சிநேகிதர்களுக்கு உதவுவதற்காக இந்தக் கோலம் பூண்டேன். சமயத்தில் உதவியும் செய்ய முடிந்தது.''

''ஆ! இது என்ன அதிசயமான உருவ ஒற்றுமை? தத்ரூபமாய் அப்படியே இருக்கிறதே! சுவாமி, தாங்கள் யார்? ஒரு வேளை...!''

''இல்லை, ஆயனரே இல்லை! வாதாபி புலிகேசிச் சக்கரவர்த்தியும் நாக நந்தி பிக்ஷுவும் ஒருவரல்ல. ஏதோ ஓர் அற்புதமான சிருஷ்டி மர்மத்தினால் எங்கள் இருவருக்கும் கடவுள் அத்தகைய உருவ ஒற்றுமையை அளித்திருக்கிறார். அதைப் பயன்படுத்தி, பரத கண்டத்தின் பாக்கியத்தினால் பிறந்த மகா சிற்பியின் உயிரைக் காப்பாற்றினேன்.''

''ஆ! சுவாமி! என் உயிரைக் காப்பாற்றி என்ன பயன்? என் மகள்... என் மகள் சிவகாமி...!''

''ஆயனரே! நீரே சொல்லும், நான் என்ன செய்யட்டும் என்று? உம்முடைய மகளைத் தேடிக் கொண்டு போகட்டுமா? அல்லது மாமல்லபுரத்துக்குப் போகட்டுமா?''

ஆயனர் வேதனை ததும்பிய குரலில், ''சுவாமி! என் மகளைக் கடவுள் காப்பாற்றுவார். நீங்கள் மாமல்லபுரத்துக்குப் போங்கள்! உடனே புறப்பட்டுப் போங்கள்!'' என்று கதறினார். அவரைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வேஷதாரி பிக்ஷு அந்தச் சிற்பக் கிருகத்திலிருந்து வெளியே சென்றார்.

உட்புறத்திலிருந்து சிவகாமியின் அத்தை தயங்கித் தயங்கி வந்து ஆயனர் அண்டை உட்கார்ந்து கொண்டாள். ''தம்பி! உனக்கு என்ன உடம்பு?'' என்று கேட்டாள். ஆயனர் அதற்கு மறுமொழி சொல்லவில்லை. அத்தை திடீரென்று பதற்றத்துடன் ''குழந்தை எங்கே? சிவகாமி எங்கே?'' என்று கேட்டாள்.

ஆயனர் நிமிர்ந்து உட்கார்ந்து, அந்தச் சிற்ப மண்டபமே அதிரும்படியான உரத்த குரலில், ''அக்கா! சிவகாமி எங்கே? என் மகள் சிவகாமி எங்கே?'' என்று கேட்டார். கேட்டு விட்டுத் தலை குப்புறப்படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதார்.

ஆயனருடைய குரலைக் கேட்டுக் கொல்லைப்புறத்திலிருந்து ரதியும் சுகரும் உள்ளே ஓடி வந்தனர். ஆயனர் அழுவதைப் பார்த்து விட்டு அந்தப் பிராணிகள் சிலைகளைப் போல் அசையாமல் நின்றன.

அமரர் கல்கி

# இருபத்தாறாம் அத்தியாயம்

# கர்வ பங்கம்

காஞ்சி அரண்மனையின் அந்தரங்க மந்திராலோசனை மண்டபத்தில் மகேந்திர பல்லவர் வீற்றிருந்தார். அவருக்கு எதிரே சேனாதிபதி கலிப்பகை, முதன் மந்திரி சாரங்கதேவர், முதல் அமைச்சர் ரணதீரர், ஒற்றர் தலைவன் சத்ருக்னன், குண்டோதரன் ஆகியவர்கள் நின்றார்கள்.

மகேந்திர பல்லவருடைய முகம் பிரகாசமாய்ப் புன்னகை மலர்ந்து விளங்கிற்று.

''குண்டோதரா! நீயே உன் கண்ணால் பார்த்தாயா? உண்மையாகவே மாமல்லபுரத்திலிருந்து சளுக்கர் படைகள் திரும்பிப் போயினவா? சிற்பங்களுக்கு ஒரு கேடும் நேரவில்லையே? நிச்சயந்தானே?'' என்று கேட்டார்.

''ஆம், பல்லவேந்திரா! எனக்கு அப்போது ஏற்பட்ட ஆச்சரியத்தை என்னவென்று சொல்வேன்? சளுக்க ராட்சதர்கள் இரண்டாயிரம் பேர் கைகளில் கடப்பாரைகளையும் இரும்பு உலக்கைகளையும் எடுத்துக் கொண்டு திடுதிடுவென்று ஓடி வந்தார்கள். ஐயோ! ஆயிரமாயிரம் சிற்பிகள் அரும்பாடுபட்டு வேலை செய்த ஜீவ வடிவங்கள் எல்லாம் ஒரு நொடியில் நாசமாகப் போகின்றனவே என்று என் உள்ளம் பதைத்தது. தாங்கள் அந்தக் கோரக் காட்சியைப் பார்க்கும் போது தங்களுடைய மனம் என்ன பாடுபடும் என்று நினைத்துக் கொண்டேன். அடுத்த நிமிஷம் எங்கிருந்தோ திடீரென்று அந்தப் பாறை உச்சி மீது புலிகேசிச் சக்கரவர்த்தி தோன்றினார். கம்பீரமாகக் கையினால் சமிக்ஞை செய்தார். அவ்வளவுதான்! ராட்சதர்களைப் போல் பயங்கரமாய் ஊளையிட்டுக் கொண்டு ஓடி வந்த சளுக்கர்கள் ஸ்தம்பித்து நின்று விட்டார்கள். அவ்விடத்தில் அந்த நேரத்தில் வாதாபிச் சக்கரவர்த்தியை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அவர் இட்ட கட்டளையை அவரே மாற்றிச் சிற்பங்களை அழிக்காமல் திரும்பிப் போகும்படி கட்டளையிடுவார் என்றும் எதிர்பார்க்கவில்லை. பிரபு! நானே அந்த அதிசயத்தினால் சிறிது நேரம் சிலையாகப் போய் விட்டேன். எல்லாரும் அவ்விடம் விட்டுப் போன பிறகுதான் எனக்குச் சுய நினைவு வந்தது. உடனே புறப்பட்டு ஓடி வந்தேன்!'' என்றான் குண்டோதரன்.

சாரங்க தேவர், ''பிரபு! தங்களுடைய மாயாஜால வித்தைகளுக்கு எல்லையே கிடையாது போல் இருக்கிறதே! சளுக்க சக்கரவர்த்தி போட்ட கட்டளையை அவரே ஓடி வந்து மாற்றும்படி எப்படிச் செய்தீர்கள்?'' என்று கேட்டார்.

''ஆகா! அந்த மூர்க்கனுடைய மனத்தை - கலை உணர்ச்சி என்பதே இல்லாத கசடனுடைய மனத்தை மாற்ற முடியுமா? பிரம்மாவினால் கூட முடியாது!'' என்றார் மகேந்திரர்.

''அப்படியானால் இந்த அதிசயம் எப்படி நடந்தது. பல்லவேந்திரா! மாமல்லபுரத்தை எப்படிக் காப்பாற்றினீர்கள்?'' என்று முதல் அமைச்சர் ரணதீர பல்லவராயர் கேட்டார்.

''சிறு துரும்பும் ஒரு சமயம் உதவும் என்று பழமொழி இருக்கிறதல்லவா? புத்த பிக்ஷுக்களினாலும் பிரயோஜனம் உண்டு என்று நான் எண்ணியது சரியாய்ப் போயிற்று!''

''பிரபு! புதிர் போடுகிறீர்கள். ஒன்றும் விளங்கவில்லை!''

''நாகநந்தி பிக்ஷுவைச் சிறைப்படுத்தி வைத்திருந்தேனல்லவா? இந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் நேரலாம் என்று எண்ணித்தான் வைத்திருந்தேன். புலிகேசி இங்கிருந்து போகுமுன் கடைசியாக நாகநந்தி பிக்ஷுவைத்தான் யாசித்தான். ஒருகணம் என் மனங்கூடச் சலித்து விட்டது. ஒரு வழியாக நாகநந்தியையும் புலிகேசியுடன் கூட்டி அனுப்பி விடலாமா என்று எண்ணினேன். நல்லவேளையாக அப்படிச் செய்யாமல் அவரை நிறுத்தி வைத்துக் கொண்டேன். அதனாலேதான் இப்போது மாமல்லபுரம் பிழைத்தது!''

சத்ருக்னன், ''தங்களுடைய கட்டளையின் கருத்து எனக்கு இப்போதுதான் புரிகிறது. 'சுரங்க வாசலைத் திறந்து வைத்துக் கொண்டு உட்கார்ந்திரு! வெளியில் யார் போனாலும் அதிசயப்படாதே! யோக நிஷ்டையிலேயே இருந்து விடு!' என்று ஆக்ஞையிட்ட சமயம் ஒன்றுமே விளங்க

வில்லை. நாகநந்தி வெளியில் வந்த போது எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஓடிப் போய் அந்தக் கள்ள பிக்ஷுவின் கழுத்தைப் பிடித்து நெறித்து விடலாமா என்று ஒருகணம் தோன்றியது. தங்களுடைய கண்டிப்பான கட்டளையை எண்ணிச் சும்மா இருந்தேன்'' என்றான்.

சேனாதிபதி கலிப்பகை, ''எங்களுக்கெல்லாம் இன்னமும் ஒன்றும் புரியவில்லை! நாகநந்தி பிக்ஷு போய்ப் புலிகேசியை அழைத்துக் கொண்டு திரும்பி வந்து மாமல்லபுரத்தைக் காப்பாற்றியதாகவா சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''நாகநந்தி புலிகேசியை அழைத்து வரவில்லை; நாகநந்தியே புலிகேசியாகி விட்டார்!'' என்று மகேந்திரவர்மர் சொன்னதும் ஏக காலத்தில் 'ஆ' என்ற வியப்பொலி கிளம்பியது.

''உங்களுக்கெல்லாம் முகத்தில் கண்கள் இருக்கின்றன. ஆனால், இருந்தும் என்ன பிரயோஜனம்? கண்களை நீங்கள் உபயோகிப்பதில்லை. நாகநந்தியின் முகத்துக்கும் புலிகேசியின் முகத்துக்கும் உள்ள ஒற்றுமையை நீங்கள் யாரும் கவனிக்கவில்லையா? நாகநந்திதான் புலிகேசியோ என்று கூட ஒரு சமயம் நான் சந்தேகித்தேன். இல்லையென்று பிற்பாடு தெரிந்தது. இந்த மாதிரிச் சந்தர்ப்பத்தில் உபயோகப்படுவார் என்றுதான் நாகநந்தியைப் பத்திரமாய்ச் சிறைப்படுத்தி வைத்திருந்தேன். புலிகேசி இங்கே வந்திருந்த போது அவருடைய கிரீடத்தையும் ஆபரணங்களையும் போல் நம்பொற் கொல்லர்களைக் கொண்டு செய்வித்திருந்தேன். அவற்றுடன் நேற்று அவரை அனுப்பினேன். நேரே மாமல்லபுரம் போகச் சொன்னேன்.''

''தலைவர் இப்படி ஏமாந்து போவார்னு நான் எதிர்பார்க்கவே யில்லை!''

''அப்படி எதுல ஏமாந்தார்?''

''புறம்போக்கு நிலத்தை வளைச்சுப் போட்டவர், வேலி போட மறந்திட்டார்; எதிர்க்கட்சிக்காரன் வேலி போட்டுட்டான்!''

- எஸ். பாண்டியராஜ்



''நாகநந்தி அவ்வளவு சுலபமாகச் சம்மதித்து விட்டாரா, பிரபு?''

''பிக்ஷுவானாலும், ஒற்றனானாலும் உயிருக்கும் விடுதலைக்கும் ஆசைப்படாதவர் யார்?'' என்றார் மகேந்திரர்.

''ஆனால், அந்தக் கபட வேஷதாரியிடம் தாங்கள் எப்படி நம்பிக்கை வைத்து வெளியே அனுப்பினீர்கள்?''

''ஆ! நாகநந்தி மனிதனேயல்ல; மனித உருவத்திலுள்ள அரக்கன்; விஷம் ஏற்றிய கத்தியை உபயோகிக்கும் பாதகன்! ஆனாலும் அவன் கலைஞன்! அவன் உள்ளத்தில் கலைப்பிரேமை இருப்பதை நான் அறிவேன். நிச்சயமாய் மாமல்லபுரத்தைக் காப்பாற்றுவான் என்றும் எனக்குத் தெரியும். ஆகையினால், அவனை அனுப்பினேன். ஆயனரின் சிற்பக் கிருகத்தையும் காப்பாற்றி விட்டிருந்தால் அப்புறம் அவன் என்னவாய்ப் போனாலும் கவலை இல்லை!''

இந்த விவரங்களையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த முதன் மந்திரி முதலியவர்கள் அளவிறந்த வியப்பில் ஆழ்ந்து மௌனமாக நின்று கொண்டிருந்தார்கள்.

அந்த மௌனத்தைப் பிளந்து கொண்டு வெளியே ஒரு பெண்ணின் அழுகுரல் கேட்டது. காவலன் ஒருவன் உள்ளே ஓடி வந்து தண்டம் சமர்ப்பித்து விட்டு, ''பிரபு! மன்னிக்க வேண்டும். கண்ணபிரான் பெண்சாதி கமலி வந்து தங்களை உடனே காண வேண்டும் என்கிறாள். நாங்கள் தடுத்ததற்கு அழுது கூக்குரல் போடுகிறாள்!'' என்றான். சக்கரவர்த்தியின் முகத்தில் சிறிது கலக்கத்தின் அறிகுறி தென்பட்டது. ''வரச் சொல்!'' என்று உத்தரவிட்டார்.

அடுத்த நிமிஷம் கமலி தலைவிரிகோலமாய் உள்ளே ஓடி வந்து ''பல்லவேந்திரா! இந்தச் சண்டாளியை மன்னிக்க வேண்டும். பெரிய துரோகம் செய்து விட்டேன்'' என்று கதறிச் சக்கரவர்த்தியின் காலில் விழுந்தாள்.

அன்று காலையில் கமலியின் மாமனார் அசுவபாலர் கமலியைப் பார்த்து, ''எங்கே அம்மா, ஆயனரையும் அவர் மகளையும் காணோம்?'' என்று கேட்டார்.

கமலி சாதுரியமாக, ''அவர்களுக்கு இந்த வீட்டில் பொழுது போகவில்லையாம். இந்தப் பச்சைக் குழந்தையின் விஷமம் பொறுக்கவில்லையாம். ஊரிலுள்ள கோயில்களையெல்லாம் பார்த்து வரப் போயிருக்கிறார்கள். அவர்களுக்குத்தான் சிற்பம் சிலைகள் என்றால் பைத்திய

மாயிற்றே?'' என்றாள்.

''நல்லவேளை! கோட்டைக்கு வெளியே போக வேண்டும் என்று சொன்னார்களே? போயிருந்தால் என்ன கதி ஆகியிருக்கும் தெரியுமா? அந்தப் படுபாவி புலிகேசியின் ஆட்கள் ஊர்களையெல்லாம் கொளுத்துகிறார்களாம். சிற்பிகளையெல்லாம் காலையும் கையையும் வெட்டுகிறார்களாம். கன்னிப் பெண்களையெல்லாம் கவர்ந்து சிறைப்படுத்திக் கொண்டு போகிறார்களாம்...''

இதைக் கேட்டதும் கமலி, ''ஐயோ!'' என்று அலறினாள். அலறிக் கொண்டே அசுவபாலரிடம் விஷயத்தைக் கூறினாள். அவர் கமலியை மனங்கொண்ட வரையில் திட்டி விட்டு, ''ஓடு! ஓடிப் போய்ச் சக்கரவர்த்தியிடம் நடந்ததைச் சொல்லு!'' என்றார். அதன்படியேதான் கமலி சக்கரவர்த்தியிடம் ஓடி வந்தாள்.

**வி**ம்மலுக்கும் அழுகைக்கும் இடையே தட்டுத் தடுமாறிக் கமலி விஷயம் இன்னதென்று சொல்லி முடித்த போது, சக்கரவர்த்தியின் முகபாவம் அடியோடு மாறிப் போயிருந்தது. கர்வத்துடன் கூடிய புன்னகைக்கு மாறாகச் சொல்ல முடியாத வேதனை இப்போது அம்முகத்தில் குடிகொண்டிருந்தது. சத்ருக்னனைப் பார்த்து, ''இவள் சொல்வது உண்மையா, சத்ருக்னா! உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

சத்ருக்னன் நடுங்கிய குரலில், ''ஆம், பிரபு! நாகநந்தி போய்ச் சற்று நேரத்துக்கெல்லாம் ஓர் ஆடவரும் ஒரு பெண்ணும் வெளிச் சென்றார்கள். ஆயனர், சிவகாமி மாதிரி தோன்றியது. யார் வெளியே போனாலும் அதிசயப்பட வேண்டாம் என்று தாங்கள் ஆக்ஞையிட்டிருந்தபடியால் பேசாமல் உட்கார்ந்திருந்தேன்'' என்றான்.

**ம**கேந்திரர், முதன் மந்திரி முதலியவர்களை நோக்கி, ''சற்று முன்னால் என்னுடைய சாமர்த்தியத்தைப் பற்றி நானே கர்வப்பட்டுக் கொண்டிருந்தேனல்லவா? கடவுள் கர்வபங்கம் செய்து விட்டார். சிவகாமியைப் பறிகொடுத்து விட்டு மாமல்லனுடைய முகத்தில் நான் விழிக்க முடியாது. சேனாதிபதி! உடனே படைகளைத் திரட்டுங்கள். ஒரு முகூர்த்தப் பொழுதில் நம் படைகள் வடக்குக் கோட்டை வாசலில் ஆயத்தமாயிருக்க வேண்டும்'' என்றார்.

(தொடரும்)

## அருள்வாக்கு



**ஒ**ரு விறகுக் கட்டு இருந்து. அதைச் சுற்றிப் போட்ட கயிற்றுக் கட்டு முடிச்சு அவிழ்க்க முடியாமல் ஆனால் என்ன செய்வார்கள் தெரியுமா? கட்டு தளர்வதற்கு, முதலில் கட்டிய கயிற்றை விட இறுக்கமாக அதை இன்னொரு கட்டுப் போட்ட மாதிரி சுற்றி நெருக்கிப் பிடித்துக் கொள்வார்கள். 'கட்டுப் போட்ட மாதிரி'தானே ஒழிய, முடிச்சுப் போட்டுக் கட்டியே விட மாட்டார்கள். இந்த இறுக்கத்தில் முதலில் முடிச்சுப் போட்டுக் கட்டின கட்டு லூஸாகி விடும். அதை எடுத்துப் போட்டு விடலாம். அப்புறம், கட்டின மாதிரி, ஆனால் கட்டியே விடாமல் சுற்றியிருக்கிற இன்னொரு கயிற்றையும் எடுத்து விட்டால் விறகுகள் கட்டற்று விடுபட்டு விடும். இதே மாதிரி மனசின் க்ருத்ரிமத்தில் பல திணுஸான கார்யங்களால் மனசை முடிச்சாகக் கட்டுப் போட்டுக் கொண்டு, ஸம்ஸார பந்தத்தில் கிடக்கிற நாமும் அதிலிருந்து விடுபட, ''சாஸ்த்ர கர்மா'' என்று கட்டு மாதிரி உள்ளதைப் போட்டுக் கொள்ள வேண்டும். கன்னாபின்னா கட்டாக இல்லாமல், சாஸ்த்ர மூலமாக ரிஷிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்ம ரூபமாக அநேக கார்யங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ரிஷிகளின் மூலமாக ஈச்வரனே போட்ட ரூல்கள் இவை. நம் ஸ்வந்த ஆசையின் மேலே கன்னாபின்னா என்று காரியங்கள் பண்ணிப் பண்ணி, முடிச்சாகப் போட்டுக் கொண்டிருக்கிற கட்டு தளர்வதற்கு, இந்த ஸ்வதர்ம கர்மக் கட்டுதான் உதவி புரிவது. இது அசல் கட்டு அல்ல. கட்டு மாதிரி நெரிக்கும். ஆனாலும் இதிலே நெரிபடுவது நம்முடைய தப்பான ஆசைகள்தான். நம்மை நல்லதில் விடுவிப்பதற்கே இந்த நெரிப்பு. இதைப் புரிந்து கொண்டால் சாஸ்த்ர கர்மாக்களை ரூல்கள் கொஞ்சங்கூடத் தப்பாமல் ஸந்தோஷமாகச் செய்து கொண்டே போகலாம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

போட்டி நாடகம்




# ஆசையே அலைபோல

## காட்சி - 1

**(காலை வேளைக்கே உரிய பரபரப்பு ராகவனின் வீட்டிலும். ராகவனும் அவன் மனைவி ரமாவும் தான் அந்த வீட்டில் என்றாலும், அன்று ராகவ னின் தாய் குஞ்சம்மா பம்பாயிலிருந்து வரப் போகும் நாள் என்பதால் கூடுதல் பரபரப்பு.)**

ரமா : ஏன்னா, ஸ்டேஷனுக்குப் போக நாழியாகல்லே? நீங்க போறதுக் குள்ளே ரயில் வந்துடப் போறது. அம்மா தனியாத் திண்டாடிப் போவாரே. கிளம்புங்க.

ராகவன் : ஏண்டி ரமா, தெரியாமத்தான் கேக்கறேன், ஒனக்கு நிஜமாவே எங்க அம்மா வர்றதிலே இத்தனை சந்தோ ஷமா? மாமியாரும், மாட்டுப் பொண்ணும் ஒருத்தரை ஒருத்தர் நன் னாத்தான் தலையிலே வெச்சண்டு ஆடறேள்! ஆமா, அம்மா எங்காளும் சொந்தக்காராளைப் பாத்துட்டுத் திரும்பி வர்றப்போ எல்லாம் ஒனக் கும் ஒரு சங்கடம் காத்திருக்குமே, மறந்துட்டியா?

ரமா : நீங்க வேற, எதையாவது ஞாபகப் படுத்தி வயத்தைக் கலக்காதீங்கோ. அம்மா இப்ப போயிட்டு வர்றது உங்க அத்தை வீட்டுக்குத்தானே! போன வருஷமே ஒரு தரம் அங்கே போயிட்டு வந்துட்டாரே. வந்ததும் உங்க அத்தை பெண் பின்னியிருந்த ஸ்வெட்டரைப் புகழ்ந்து, உடனே நானும் ஸ்வெட்டர் பின்னக் கத்துண் டால்தான் ஆச்சுன்னு, என்னை அரிச்சு எடுத்துக் கத்துக்க வச்சாரே, மறந்து போச்சா? அதனாலே, புதுசா இதைக் கத்துக்கோ, அதைப் போடுன்னு சொல்றதுக்கு ஒண்ணும் விஷயம் இருக்காது. ஆனாலும் உங்கம்மா வுக்கு இப்படி ஒரு ஆசை இருக்க வேண்டாம்.

ராக : என்ன பண்றது? அம்மாவுக்கு ஊரிலே எல்லாப் பொண்களுக்கும் தெரிஞ்சிருக்கிற அத்தனை விஷயங்க ளும், தன்னோட ஒரே மாட்டுப் பெண் ணுக்குத் தெரிஞ்சிருக்கணும்னு ஆசை.

ரமா : சரி, சரி, ஸ்டேஷனுக்குக் கிளம் புங்கோ.

## காட்சி - 2

**(ராகவன் பின்தொடர குஞ்சம்மா உள்ளே வருகிறாள்)**

ரமா : வாங்கோம்மா, பிரயாணம் சுகமா இருந்துதா?

குஞ்சம்மா : என்ன ரயிலோ என்னவோ? உடம்பெல்லாம் ஒரே வலிதான்.

ரமா : அத்தை வீட்டிலே எல்லாரும் சௌக்கியமா?

குஞ் : சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல். ஆனாலும் இந்தத் தங்கத்துக்கு இத் தனை தலைக்கனம் ஆகாதுடியம்மா!

ராக : இரு. இரு. நாங்க உட்கார்ந்துக்க றோம்.

**(குஞ்சம்மா ஆரம்பித்தால் சீக்கிரத்தில் நிறுத்த மாட்டாள் என்பது தெரிந்தே இருப்பதால் சௌகரியமாக உட்கார்ந் துண்டு, "ம்... இப்ப ஆரம்பி" என்கி றான் ராகவன்)**

குஞ் : என்னமோ, இவளுக்குத்தான் பெரிசா, ஊரிலே இல்லாத மாட்டுப் பொண் வாய்ச்ச மாதிரி தலைல தூக்கி வைச்சண்டு ஆடறா.

ராக : அட, விஷயத்தைச் சொல்லும்மா.

குஞ் : அவ என்னவோ 'பத்திக்' பெயிண் டிங்காமே, காமா சோமான்னு திட்டுத் திட்டா, விரிசல் விழுந்தா மாதிரி ஒரு படம் போட்டிருந்தா... அதைப் போட்டு எக்ஸிபிஷன்ல எல்லாம் வச் சாளாம். வர்றவா, போறவாகிட்ட பெருமையடிக்கக்றது பத்தாதுன்னு என்கிட்ட கூட ஆரம்பிச்சா, நான் விட் டுடுவேனா? இதெல்லாம் என்ன பிர மாதம்? இப்பத்தான் ஒன் மாட்டுப்

கௌசல்யா ஸ்ரீவத்ஸன்

பொண் இதைக் கத்துண்டாளா? எங்க ரமா ரெண்டு வருஷம் முந்தியே இது மாதிரி நிறையப் போட்டு, சலிச்சுப் போய் இப்ப நிறுத்திட்டான்னு சொன்னேன். பாரு, தங்கு மூஞ்சி சுண்டெலி கணக்காச் சிறுத்துடுத்து. ரமா, உனக்கு அந்த 'பத்திக்' போடத் தெரியும் தானே?

ரமா : அய்யய்யோ, எனக்கு அது தெரியாதேம்மா. என்ன நீங்க பாட்டுக்கு இப்படி சொல்லிட்டு வந்துட்டேள்.

குஞ் : தெரியாட்டி என்ன? இனிமே கத்துண்டு ரெண்டு படம் போட்டு ஹால்லே மாட்டி வச்சாப் போறது. அத்தனை சீக்கிரம் தங்கம் எங்கே இங்கே வரப் போறா?

ராக : ரெண்டு, மூணு மாசமா ஒண்ணும் பு து வி ஷ ய ம் காணோமேன்னு நினைச்சேன்.

குஞ் : என்னடா முணுமுணுக்கிறே?

ராக : ஒ ன் ணு மி ல் லே ம் ம ா... ரமா, அப்போ இன்னிக்கு சாயங்காலம் வர்றச்சே 'பத்திக்' போட எங்கே கத்துத் தர்றான்னு விசாரிச்சுட்டு வந்திடறேன். ஜமாய்.

(பலி ஆடு போல் ரமா விழிப்பதை லட்சியம் செய்யாமல் இருவரும் போகிறார்கள்)

## காட்சி - 3

ரமா : இதப் பாருங்கோ, ஒரொரு தடவையும் உங்கம்மா எங்கேயாவது ஊருக்குப் போயிட்டு வர்றச்சே இப்படி எதையாவது உளறி, என் தலையை வேற உருட்டிட்டு வந்துடறாங்க. இவங்க ஆசையைத் தீர்த்து வைக்கிறதுக்குள்ளே என் பொறுமை போயிடும் போல இருக்கு. இதுவரை எத்தனை வேலை கத்துண்டிருக்கேன். லிஸ்ட் போட்டா முழு நீளத்துக்கு வரும். எல்லாம் ஏதோ எனக்கும் வர்ற மாதிரி இருந்ததாலே இதுவரை சமாளிச்சுட்டேன். இப்படியே விட்டா எதிலேயோ போய் மாட்டிக்கப் போறேனோன்னு பயம்மா இருக்கு. இதுக்கு ஒரு வழி பண்ணியாகணுமே.

ராக : உன்னூர்லே அம்மாகிட்ட பெருமை



யடிக்கக்கற மாதிரி யாரும் பேச மாட்டா. அ த னா லே அம்மாவை வெளியூர் எ ங் கே யு ம் அனுப்பாம இருந்திட்டா, கொ ஞ் ச நாள்லே, இல்லே, கொ ஞ் ச வருஷத்திலே அம்மாவோட இந்தக் குணம் கட்டாயம் மாறிடும்னு நினைக்கிறேன்.

ரமா : கரெக்ட்! இனிமே கல்யாணம், கார்த்தின்னு எது வந்தாலும் அம்மாவை எ ங் கே யு ம் அனுப்பறதில்லே. நீங்களே போயிட்டு வந்துடுங்கோ.

## காட்சி - 4

குஞ் : வெளி மனுஷாளைப் பா ர் த் து எத்தனை நாளாச்சு? ரமா, வா, நாம சித்தே கோ வி ல் வரையாவது போயிட்டு வரலாம்.

**(கோயிலில் ரமாவின் பள்ளித் தோழி ஜானு வருகிறாள்)**

ஜானு : ஹலோ ரமா, எத்தனை வருஷமாச்சுடி உன்னைப் பார்த்து. இவர் உன் மாமியாரா? நமஸ்காரம் மாமி. ரமா, நான் எங்க சின்ன அண்ணா வீட்டுக்கு வந்தேன். உன் அட்ரஸ் கொடு. வீட்டுக்கு வர்றேன். நிறையப் பேசலாம். ஆங், அப்புறம்.. வர்ற திங்கக் கிழமை மத்தியானம் எங்க பெரிய மன்னி, திருச்சியிலே இருக்காளே அவ, ரேடியோவிலே பாடப் போறா. மறக்காம கேளு, என்ன?

ரமா : (அவசரமாக இடைமறித்து) சரி, சரி. கேக்கறேன். மதராஸ் எ ப் ப டி இருக்கு? தண்ணி கஷ்டம் இல்லியே?

**(மாமியார் இடையில் புகுந்து)**

குஞ் : ஏண்டிம்மா ரமா, அவ என்னவோ ரேடியோ, பாட்டுன்னு சொன்னாப் பலே இருந்துதே என்ன அது?

ரமா : (ப த ற் ற மா க) அதொண்ணுமில்லேம்மா, ரேடியோவில பாட்டு கேக்கச் சொன்னா. நமக்கு அதுக்கெல்லாம் நேரம் எங்கேயிருக்கு... இல்லியாம்மா? அப்ப கிளம்பலாமா?

ஜானு : என்னடி ரமா? அப்ப எங்க மன்னி பாட்டைக் கேக்க ஒழியாதா உனக்கு? உனக்குத்தான் எங்க மன்னி பாடினாப் பிடிக்குமே. நீ என்ன...

குஞ் : மன்னியா? வி வ ர மா ச் சொல்லேன்மா.

**(காரியம் கை மீறிப் போவதைத் தடுக்க இயலாத தவிப்புடன் ரமா நிற்பதைக் கவனிக்காமல் ஜானு பெருமையாகச் சொல்லிக் கொண்டு போகிறாள்.)**

ஜானு : ஆமாம் மாமி, எங்க பெரிய மன்னி ரொம்ப நன்னாப் பாடுவா. அவ ரேடியோவில பாடப் போறா. அதத்தான் மறக்காம கேக்கச் சொன்னேன். உங்களுக்குக்கூட பாட்டுன்னா இஷ்டம் போல இருக்கே. எங்க மன்னி எவ்வளவு ஜோராப் பாடுவா தெரியுமா?

குஞ் : இருக்கட்டும், இருக்கட்டும். நன்னா அழகாப் பாடட்டும். எங்க ரமா பாடாத பாட்டா? (ரமாவும் ஜானுவும் திகைப்பதை லட்சியம் செய்யாமல் தொடருகிறாள்.) கொஞ்சம் கூச்ச சுபாவம் அவளுக்கு. பிறத்தியார் எதிரிலே பாட பயப்படுவா. அவ்வளவுதான். நாம என்ன கச்சேரியா செய்யப் போறோம்? ஏதோ ஸ்வாமி விளக்கேத்தி வைச்சு ரெண்டு பாட்டுப் பாடினாப் போதாதா என்ன? என் மாட்டுப் பெண்ணை என்னன்னு நினைச்சே? சாதகம் பண்ணிண்டே இருந்தா உங்க மன்னியை விட நன்னாவே பாடுவா தான். சம்சாரம்... ஒழிய மாட்டேங்கறது. அப்பப் போயிட்டு வரோம்டியம்மா.

## காட்சி - 5

ராக : ஏம்மா? உன்னோட ஆசைக்கு விவஸ்தையே இல்லியா? ரமா நன்னாப் பாடுவான்னு, அதுவும் அவ கூட அஞ்சு வருஷம் ஒண்ணாப் படிச்சவகிட்டே, ரீல் விட்டுட்டு வந்திருக்கியாமே. நீ சொன்னது அத்தனையும் புளுகுன்னு தெரிஞ்சிருக்காதா அவளுக்கு?

குஞ் : அவ மன்னிதான் உலகத்திலேயே அதிசயமாப் பாடற மாதிரி பேசினா.

---

**செ**ன்னை திரைப்பட விழாவில் மிகவும் சிறப்பாகப் பேசப்பட்ட 'நிகிதா'வை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது என சம்பந்தப்பட்டவர்களால் கூச்சமில்லாமல் ஒப்புக் கொள்ளப்பட்ட கரு. போகட்டும், அந்த வழியிலாவது தமிழுக்கு ஒரு நல்ல படம் கிடைக்கட்டுமே?

காத்திருக்கிறோம்.

அடர்ந்த நிறங்களில் துவக்கம். ஏக், தோ,தீன் பாணியில் ஒரு கல்லூரி நடனம். கௌதமி. ஊர், வீடு திரும்புகிறார். அப்பா உட்பட குடும்பமே மரணம். காரணம் யாரெனத் தெரியவருகிறது. கூடவே கடித ஆதாரம். சேர்ப்பிக்கப்படுகிற காவல் துறை உயர் அதிகாரியே எதிரிகளில் ஒருவர், நேர்மையான தன் தந்தை இறக்க ஒரு காரணம் என்கிற திடுக் உண்மை புரியவருகிறது. சீறும் கௌதமிக்குச் சிறை, சித்திரவதை. நல்மன பெண் அதிகாரி லட்சுமியின் வாயிலாக 'மதுரை'- என்கிற பாக்யராஜ் அறிமுகம். உதவி. சம்பவங்கள். குற்ற

# ருத்ரா



வாலிக்குத் தண்டனை.

நீண்ட பெருமூச்சு.

எத்தனை திருப்பங்களுக்கான, விறு விறுப்புக்கான வாய்ப்புக்கள்? அத்தனையையும் இப்படியா கோட்டை விடுவார்கள்?

கௌதமியா இப்படி 'ரிவால்வர் ரீட்டா' - பாணியில் சுழன்று சுழன்று சண்டையிடுவது? விஸில் அடிக்கத் தோன்றுகிறது.

பாக்யராஜ் படத்திற்குச் சாதகமா, பாதகமா? பட்டிமன்றம் வைக்க வேண்டிய தலைப்பு. வங்கியைக் கொள்ளையடிப்பதில், எதிராளிகளைப் பயந்து கொண்டே ஏமாற்றுவதில் நம்மை வசீகரிக்கறார். ஆனால் கதையின் சீரியஸ் போக்கை இவரின் வரவு திசை திருப்பி விடுவதுதான் வேதனை.

கௌதமி தன் ஆவேசத்தையும், லட்சியத்தையும் அலட்சியப்படுத்தி விட்டு பாக்யராஜுடன் வழிகிறேன் பேர்வழி என... துணைக்கு லட்சுமி. அசடு வழிவதில் ஏழெட்டு வகையுண்டு. அதில் ஒன்று ருத்ரா.

- சுந்தர்ஜி

அதான் சட்டுனு அப்படிச் சொல்லிட்டேன். என்ன இப்ப? அதுக்கா இப்படி மூஞ்சைத் தூக்கி வைச்சிண்டிருக்கிறே? அசடு, அவ கேட்டா, கல்யாணத்துக்கு அப்புறம் கத்துண்டதாச் சொல்லிச் சமாளிச்சுப்பியா, அத விட்டுட்டு... அப்புறம்... எதுக்கும் பாட்டைக் கொஞ்சம் கத்துக்கவும் ஆரம்பிச்சுடு. லலிதா கலா மன்றத்திலே சொல்லித் தர்றாளாம்.

ரமா : அம்மா, எங்க ஸ்கூல்லே இருந்த பாட்டு வாத்தியார் அவசரமா ரிசைன் பண்ணிட்டு வேற ஊருக்குப் போயிட்டார் தெரியுமோ உங்களுக்கு?

குஞ் : என்னடி, சம்பந்தமில்லாம...

ரமா : ஏன்னு கேக்கலியே நீங்க. எனக்குப் பாட்டு சொல்லித் தர அவரைத்தான் வைச்சார் எங்கப்பா. என்னோட சாரீரத்துக்கும், சங்கீதத்துக்கும் பயந்துதான் அப்படி ரிசைன் செஞ்சார். இந்த ஆசை மட்டும் வேணாம்மா. ப்ளீஸ்.

குஞ் : நீ கத்துக்க. உனக்கு வருமா, வராதான்னு பாக்க வேண்டியது நான் தானே?

ராக : உன்னோட இதே ரோதனையாப் போச்சும்மா. உன்னோட ஆசைகளுக்கு ஒரு மாட்டுப் பொண் ஈடு குடுக்க முடியாது. வராதுன்னா விடேன்.

குஞ் : என்னத்துக்கு விடறது?

ரமா : (முனகலாக) ம்... உள்ளூர்லேயே எனக்கு ஆபத்து இருக்கிறப்ப, வெளியூர் போறதைத் தடுத்தாப்பலே ஆச்சா?

## காட்சி - 6

("ஸார், போஸ்ட்" என்று தபால்காரர் குரல் கொடுக்கிறார்)

குஞ் : யார்கிட்டேர்ந்து லெட்டர்?

ரமா : ஹையா, எங்க பாலு அண்ணா எழுதியிருக்கான்மா. (படித்து) அடேடே, பாலு அண்ணாவோட கதைக்குப் பிரைஸ் கிடைச்சிருக்காம். தேர்ட் பிரைஸ்தான். பரவாயில்லே, எப்பவாச்சும் எழுதினாக் கூட, பிரைஸ் வாங்கற மாதிரி எழுதிடறான்.

குஞ் : நீ என்ன சொல்றே ரமா? உங்கண்ணன் கதை எழுதுவானா? சொல்லவே இல்லியே நீ?

ரமா : (சந்தோஷத்துடன் பெருமையாக) முந்தியெல்லாம் நிறைய எழுதுவான் அம்மா. போட்டிகள்லே பிரைஸ் கூட வாங்கியிருக்கான். நடுவிலே எழுதாம விட்டிருந்தான். இப்ப மறுபடி எழுத ஆரம்பிச்சிருப்பான் போலிருக்கு... ஏன்னா, பாலு அண்ணாவோட கதை வந்திருக்கிற புத்தகம் வாங்கிண்டு வாங்கோ, படிச்சுப் பாக்கலாம்.

குஞ் : உங்கண்ணா கதை வந்ததுக்கே இத்தனை சந்தோஷப்படறியே, உன் கதை வந்தா இன்னும் எத்தனை சந்தோஷமா இருக்கும்? இல்லியா ரமா? எங்களுக்கும் பெருமை...

ராகவன் : அசடு, மண்டு, தவளை,

தவளை...
*(ரமாவை கெக்கெப்பாக ராகவன் அர்ச்சனை செய்கிறான்)*

ரமா : *(அம்மாவின் 'அப்ரோச்' புரிய ஆரம்பிக்க. அசட்டுச் சிரிப்புடன்)* என்னம்மா நீங்க தமாஷ் பண்ணிண்டு. ராத்திரிக்குச் சப்பாத்தி செய்யட்டுமா, இல்லே உப்புமா போதுமா?

குஞ் : நான் ஒண்ணும் தமாஷுக்குச் சொல்லலை ரமா. உங்கண்ணன் ரத்தம்தானேடி ஒனக்கும். நீயும் கதை எழுதிப் பாரேன், தானா வரும்.

ராக : என்னம்மா நீ? கதை எழுதறதுன்னா கத்தரிக்கா கொத்ஸு பண்ற மாதிரியா? எல்லாரும் எல்லாத்தையும் செய்ய முடியுமோ? விடும்மா அவளை. கொஞ்சம் போனா பி. டி. உஷா ஓடி தங்க மெடல் வாங்கின மாதிரி ரமாவையும் ஓடுன்னு சொல்வே போலிருக்கு.

ரமா : அய்யய்யோ, நீங்க வேற, சித்தே சும்மா இருங்கோன்னா.

ராக : சரி... சரி... *(அம்மாவிடம்)* எல்லாத்துக்கும் ஆசைப்பட்டு அவளைக் கஷ்டப்படுத்தாதேம்மா. ரமா நீ போய்...

குஞ் : நீ சித்தே சும்மா இருடா. அவளோட 'டாலண்ட்ஸ்' அவளுக்கே தெரியாது. என்னாட்டம் ஒருத்தர் எடுத்துச் சொல்லிண்டே இருக்கணும். பாட்டுதான் ஜதம் தாண்ட மாட்டேங்கறது. இது அப்படியில்லே. எழுத்து இவ ரத்தத்திலேன்னா ஊறியிருக்கு?

ராக : எழுத்து ! ம்... தலையெழுத்து.

குஞ் : திறமையை கண்டுக்காம விட்டுடக் கூடாது.

ராக : லெட்டரே ஒழுங்கா எழுதத் தெரியாது அவளுக்கு. இதிலே திறமையை வேற கண்டுபிடிச்சாச்சா? ரமா, பாவம்டி நீ!

குஞ் : பாரேன், அவளை நான் கொஞ்சம் கொஞ்சமா பெரிய எழுத்தாளி ஆக்கிடறேன். ரமா, நீ என்ன பண்றே, முதல்லே சின்னக் குழந்தைகளுக்கு அம்புலிமாமா, கோகுலம் இதிலே வர்ற மாதிரி எழுது. போகப் போக பெரிய பத்திரிகையிலே எழுதலாம்.

ராக : அம்மா, உனக்கு இப்படி அலை மேல அலையா வர்ற ஆசைகளை நிறுத்தவே முடியாது போலிருக்கே. அவ எழுதறதையெல்லாம் போடுவான்னு நம்பிக்கை வேற!

குஞ் : அதைரியப்படுத்தாதே. நீ மொதல்லே அவளை தொடிக்கொரு தடவை கூப்புடறதை நிறுத்து. உன் ஞமை ஒழிக்கக் கொடு. பேப்பர், பேனா வாங்கிண்டு வா. அப்புறம் ஒரு டேபிள் லைட்டும் வாங்கிடு. ராத்திரியிலேதான் சிலருக்கு எழுத மூட் வருமாம். அப்படி வந்தா எழுத வசதியா இருக்கும். அப்புறம்... *(குஞ்சம்மாவின் செயல் திட்டங்கள் விரிய விரிய ரமா மயக்கமாகச் சரிகிறாள்)* என்ன, என்னடி ரமா? இப்படி விழுந்துட்டாளே. ராகவா, போய் டாக்டரை அழைச்சுண்டு வா. ஓடு. திருஷ்டியே பட்டிருக்கும்.

## காட்சி - 7

டாக்டர் : ஒண்ணும் பயப்படற மாதிரி இல்லேம்மா. நீங்க பாட்டியாகப் போறீங்க. ரமா கொஞ்சம் 'வீக்'கா இருக்காங்க. மருந்து எழுதித் தர்றேன். சாப்பிடட்டும். நல்ல ரெஸ்டிலே ஒரு மாசம் இருக்கட்டும். அப்ப நான் போயிட்டு வர்றேன். கங்கிராட்ஸ் மிஸ்டர் ராகவன்.

குஞ் : ரொம்ப சந்தோஷம்டியம்மா ரமா. ராகவா, என் மருமக 'வீக்'கா இருக்காளாமே, மருந்தோட பழங்கள் எல்லாம் வாங்கிண்டு வா. நாளன்னிக்குச் சனிக்கிழமையா? ஒனக்கு லீவுதானே? ரமாவை அவ அம்மா வீட்டிலே கொண்டு விட்டுடு. இங்கே இருந்தா நீ ஓயாம ஏதானும் வேலை சொல்லுவே. அவ பிறந்தாத்துக்குப் போய், மசக்கைக்காரி வாய்க்கு வேணுங்கறதைச் சாப்பிட்டுப் பத்து நாள் இருந்துட்டு வரட்டும்.

ராகவன் : *(கெக்கெப்பாய் ரமாவிடம்)* அம்மாகிட்டேர்ந்து தப்பிச்சே போ.

ரமா : ஸ்.. சும்மா இருங்க. *(மாமியாரிடம்)* ரொம்ப தாங்க்ஸ் அம்மா, நமஸ்காரம் பண்றேன்.

குஞ் : எனக்கு எதுக்குடி தாங்ஸும் இன்னொண்ணும். நல்லா இரு. அம்மாவாத்துக்குப் போய் ரெஸ்ட் எடுக்கறேன் பேர்வழின்னு சும்மா தூங்கித் தூங்கி முழிக்காதே. போற நேரத்தை வேஸ்ட் பண்ணாம, சமயம் வாய்ச்சப்பவே உங்கண்ணாகிட்டே கதை எழுதற சூட்சுமத்தையும் தெரிஞ்சுண்டு வா... *('அம்மாவாவது விடறதாவது' - என்று பெருமூச்சு விடுகிறான் ராகவன்.)* ...என் பேரன் பொறக்கப் போற வேளை, என் மருமக பெரிய எழுத்தாளின்னு பேர் வாங்கணும். என்ன? அடேடே, என்ன இது?... என்ன இந்தப் பொண்ணு?
*(ரமா இரண்டாம் தடவையாக மயக்கமாகச் சரிகிறாள்.)*

(திரை)

★ டீவி பார்ப்பதை விட படிப்பது கண்களுக்கு நல்ல பயிற்சி. காரணம் டீவியில் பார்வை நிலைகுத்தி நிற்கிறது. படிக்கும் போது விழிகள் இடமிருந்து வலமாகவும் வலமிருந்து இடமாகவும் நகர்கின்றன.

★ ஏழு மணி நேரம் தூங்க முடியாதவர்கள், தேவையற்ற சமயங்களில் இமைகளை மூடி வைத்திருந்து, கண்களுக்கு ஓய்வு தரலாம். உதாரணமாக, பஸ்ஸில் ஆபீஸுக்குப் போகும் போது.

★ கண் இமைகளை மூடிக் கொண்டு, விழிகளை வலமாக மூன்று முறை, இடமாக

# கண்களைப் பாதுகாக்க...



மூன்று முறை சுழற்றி, பயிற்சி தரலாம்.

★ கண்களை மூடிக் கொண்டு, உள்ளங்கைகளால் இலேசாகக் கண்களைப் பொத்திக் கொண்டு, சில நிமிடங்கள் கறுப்பு, வெள்ளை நிறங்களை நினைத்துக் கொண்டிருந்தால் கண்களின் களைப்பு நீங்கும்.

★ பார்வை பலம் பெற, தினசரி கண்களை மறவாமல் மூடிக் கொண்டு அதிகாலை சூரியனுக்கு எதிராக ஐந்து நிமிடங்கள் உட்காருங்கள்.

★ படிக்கும் போது அடிக்கடி மெதுவாகக் கண்ணிமைத்தால் கண்கள் ஆரோக்கியமாக இருக்கும்.

- எஸ். ராம்குமார், சேலம்.

## காரியாலயத்தில் நல்ல பெயரெடுக்க..

★ எந்த வேலை கொடுக்கப்பட்டாலும் 'முடியாது' என்று சொல்லாமல் முடிந்த வரை செய்யவும்.

★ எந்த வேலை கொடுத்தாலும் 'தெரியாது' என்று சொல்லாமல் தெரிந்த அளவு செய்யவும். தெரியாதவற்றைக் கற்றுக் கொள்ள முயற்சி செய்யவும்.

★ எதையும் தேடுவதற்கு இடமின்றி ஒழுங்குபடுத்தி வைத்துக் கொள்ளுங்கள்.

★ பிறகு செய்து கொள்ளலாம் என்று எதையும் ஒத்திப் போடாதீர்கள். நாளை செய்வதை இன்றே செய்யவும். இன்று செய்வதை இப்போதே செய்யவும்.

★ வேலையை முடிக்காமல் நிறுத்தி வைத்து விட்டு அரட்டைக்கோ வம்புக்கோ அலையாதீர்கள். பிறரை உங்கள் ஸீட்டுக்கு அழைத்துப் பேசாதீர்கள்.

★ எப்படிப்பட்ட 'ரொட்டீன்' வேலை யானால் என்ன அதை நீங்கள்தானே செய்து முடிக்க வேண்டும். பிறகு ஏன் 'போர்' என்று நினைக்க வேண்டும்?

- ராதா ஸ்ரீதர், சென்னை.



# வாஷிங்டன் வைரம்

## 23

நல்லதம்பி மேலே பேசினார்:

''அன்னிக்கி உங்க பெண் எப்படி செத்துப் போனாள்னு தெரியுமில்லே.... அதே கதிதான் ரகுராமனுக்கும் நடக்கும்.... நாங்க சொல்றபடி செய்தா ரகுராமனாவது உயிரோடு இருப்பான்.''

பூர்ணம் விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள். வைத்தியநாதன் அவளுக்குச் சமாதானம் சொல்வதா, தங்களை இப்படி வதைக்கும் நல்லதம்பியை உதைப்பதா என்று முடிவு செய்யுமுன், நல்லதம்பி தொடர்ந்தார். ''உங்க பெண் ஒரு லாரியில் அடிபட்டு மரணமடைந்தாள்னு நீங்க ஓடி வந்ததை நான் பார்த்தேன். அவள் அடிபட்ட லாரியை ஓட்டியது எங்க ஆளு. எங்க விஷயத்துல தலையிடறவங்களுக்கு நாங்க கொடுக்கிற தீர்ப்பு மரண தண்டனை... ஞாபகமிருக்கட்டும்!''

''ஞாபகமிருக்கிறதடா, பாவி'' என்று கத்தினார் வைத்தியநாதன். அவராலும் பூரணத்தாலும் எப்படி மறக்க முடியும்? அப்போது சுதாவுக்கு ஏழே வயது. சென்னைக்குச் சற்று வெளியே புதிதாகக் கட்டப்பட்டு வந்த காலனியில் சிறு வீடு வாங்கியிருந்தார்கள். அருகில் நிறைய கள்ளக்கடத்தல் ஆட்கள் இருப்பதாய்ப் பேசிக் கொண்டார்களே தவிர, யாரும் பயப்பட்டதாய்த் தெரியவில்லை. ஒரு நாள் சுதா லாரி ஒன்றிலிருந்து பெட்டிகளை இறக்கிய சில ஆட்களைப் பார்த்தாள். அதில் ரங்கதுரையும் ஒருவன். அவனும் சுதா கவனித்ததைப் பார்த்துவிட்டான். அடுத்த சில மணிகளில் சுதாவின் சடலம் ஆம்புலன்ஸில் ஆஸ்பத்திரிக்கு விரைந்தது. வண்டியிலேயே சுதாவின் உயிர் போயிற்று. 'தெருவில் பயங்கர விபத்து; ஏழு வயதுப் பெண் இறந்தாள்' என்று பத்திரிகைகள் தலைப்புத் தந்தன. 'இனியாவது கவனமாய் இருங்கள் - ரங்கதுரை' என்று துண்டுக் கடிதம் வைத்தியநாதனுக்கும் பூர்ணத்துக்கும் வந்த போது அவர்களால் எதுவுமே செய்ய முடியாத நிலை.

இப்போதும் அதே நிலை. அதே ரங்கதுரை.... ''ரங்கதுரை... நீதானா அந்தப் பாவி!'' என்று கத்தினார் வைத்தியநாதன்.

''நா னே தா ன்....'' அட்டகாசமாய்ச் சிரித்தான் ரங்கதுரை.

சுதாவைப் பறிகொடுத்து 23 ஆண்டுகள் ஓடிவிட்டிருந்தன. சுதா போனதிலிருந்து ரகுராமனை அவர்கள்தான் வளர்த்தார்கள். அதற்குப் பல காரணங்கள் இருந்தன. ரகுராமன் மேல் அளவற்ற அன்பையும் பாசத்தையும் கொட்டி அவனை ஆளாக்கியிருந்தார்கள்.

இப்போது ரகுராமனையும் இழப்பதா! வேண்டாம்... நிச்சயம் வேண்டாம்!

வைத்தியநாதனின் கண்கள் குளமாயின. பூர்ணத்தின் தோளை மெல்லத் தட்டிக் கொண்டே பேசினார்.

''நீ சொல்றபடியே நான் செய்யறேன்... ரகுவை ஒண்ணும் செஞ்சிடாதீங்க... அவனுக்கும் நிர்மலாவுக்கும் கல்யாணமாகி.... அவங்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கணும்... சுதாவைப் போல..... சுதாவைப் போல....'' அதற்கு மேல் அவரால் பேச முடியவில்லை.

''நம்ம அமெரிக்கா பிரயாணம் இப்படியா ஆகணும்....'' என்று பூர்ணம் மீண்டும் அழ ஆரம்பித்தாள்.

## 24

ரங்கதுரை வெளியே வந்து காத்திருந்த போது மணி 6.55 ஆகியிருந்தது. சரியாக ஏழு மணிக்கு வைரமூர்த்தியின் சிவப்பு 'வோல்வோ' வந்து நின்றது. ரங்கதுரை காருக்குள்ளே முன்புறத்தில் உட்கார்ந்ததும் வண்டி புறப்பட்டது.

''என்ன வைரம்.... எ ல் லா மே ரொம்ப வேகமாப் போகுது....'' என்றான்

# வாசன்

ரங்கதுரை.

''டேய் ரங்கா... இனிமேல் எதுவுமே மெதுவாப் போகாதுடா.... இன்னும் இரண்டே நாள். அந்த 'ஹோப்' வைரம் நம்ம கையிலே கிடைச்சிடும்.... நாமும் பறந்துடுவோம்....'' என்று வைரமூர்த்தி சொன்னபோது ரங்கதுரையின் முகத்தில் சிரிப்பு ஏற்பட்டது.

''என்னடா சிரிக்கிறே ரங்கா?''

''என்னை நீ ரங்கான்னு கூப்பிட்டு வருஷக் கணக்காச்சு... நீ பழைய நட்பை மறக்காம இருக்கிற பாரு, அதுதான் எனக்கு திருப்தி'' என்றான் ரங்கதுரை.

''சரி மேலே பேசுவோம்.... நான் ஏற்கெனவே ரிச்சர்ட் மூர் கிட்ட சொல்லி ஏற்பாடுகள் செய்துட்டேன். அவங்க 'ஹோப்' வைரத்தை நாளைக்கு மறுநாள் எடுத்துக்கிட்டுப் போகப் போறாங்க.... அது மியூசியம் திறப்பதற்கு சில மணிக்கு முன்னாலே நடக்கும்னு தெரியுது.... நாம திட்டத்தை ஒழுங்கா நிறைவேற்றணும்.... கவனமாய்க் கேளு'' என்று பெரிய பீடிகை போட்டார் வைரமூர்த்தி.

எப்படியெல்லாம் செய்யணும், எவ்வளவு நேரம் ஆகும் என்பதையெல்லாம் அழகாக விவரித்தார் வைரமூர்த்தி. எப்போதும் போல் கொஞ்சம் வாயைப் பிளந்து கொண்டு ரங்கதுரை கேட்டான். இறுதியில் பேசினான்.

''அப்ப, நிர்மலா, ரகுராமன் இவங்களை என்ன செய்யப் போறே?''

''அதுக்கும் நான் ஏற்பாடுகள் செய்து பல நாட்கள் ஆச்சு... நான் 'சிக்னல்' கொடுத்தால் அந்தத் திட்டமும் உடனே நடக்கும்.''

''என்ன திட்டம்?''

''அது உனக்குத் தேவையில்லாதது ரங்கா....'' என்று குரூரமாகச் சிரித்தார் வைரமூர்த்தி. அவனைத் திரும்பவும் ரகுராமன் வீட்டிலேயே விட்டு விட்டுச் சென்றார்.

ரகுராமனிடம் 'பார்க்கலாம்' என்று கூறி வழியனுப்பி விட்டு நிர்மலா மெட்ரோ சென்டருக்குள் நுழைந்தாள். அவளைப் பின் தொடர்ந்த ஆள் ஒரு போன் கூண்டுக்குள் சென்று வைரமூர்த்திக்கு போன் செய்தான். அப்போது மணி எட்டரையைத் தாண்டியிருந்தது.

''சரி.... நான் அங்கு வந்துவிடுகிறேன்.... கவனம் இருக்கட்டும்... அவளை பத்திரமாக என்னிடம் சேர்க்க வேண்டும்....'' வைரமூரத்தி போனை வைத்தார்.



நிர்மலா எந்த வண்டி எடுப்பாள் என்பது அந்த ஆளுக்கு நன்றாகத் தெரிந்ததே. சில நிமிடங்களில் வந்த வண்டியில் அவள் ஏறியதும், அவனும் பின் தொடர்ந்தான். அவள் சன்னலுக்குப் பக்கத்திலே உட்கார்ந்திருந்தாள். அவளைத் தன் பார்வையில் வைத்துக் கொண்டு அவன் உட்கார்ந்தான்.

ரகுராமன் நிர்மலாவை எச்சரிக்கையுடன் இருக்கச் சொல்லியிருந்தான். ராபர்ட் வார்னருக்கு ஒரு துப்பு கிடைத்ததாம். நிர்மலாவை ஒரு கறுப்பு அமெரிக்கன் பின் தொடர்ந்து வருவதாயும், எந்த நேரத்திலும் எதுவும் நடக்கலாம் என்றும் கூறி அவளைக் கவனமாய் இருக்கச் சொன்னான். ஒரு வேளை வைரமூர்த்தியின் ஏற்பாடாக இது இருக்கலாம். உள்ளுக்குள்ளே பயம் இருந்தாலும் நிர்மலா தன் வேலைகளை எப்போதும் போல் செய்து வந்தாள். அவளுடைய சி.பி.ஐ. பயிற்சி கைவிடவில்லை.

அவள் இறங்க வேண்டிய இடம் வந்தது. விரைவாக இறங்கி மெட்ரோ நிலையத்திலிருந்து வெளியேறினாள். ஜுன் மாதமானதால் வெளிச்சம் இன்னும் இருந்தது. ஆனால் தெருவிளக்குகள் எரியத் தொடங்கி இருந்தன. ஒரு முறை அவள் பின்னால் திரும்பிப் பார்த்தாள். யாரும் தன்னைத் தொடரவில்லை என்று மேலே நடந்தாள்.

அவளை முன்னால் ஒரு 'பிளாக்' நடக்கவிட்ட அந்தக் கறுப்பு ஆள் வேகமாக நடந்து தெருவைக் கடந்தான். நிர்மலா போன திசையிலேயே ஆனால் தெருவின் மறுபக்கத்திலிருந்த நடைபாதையில் அவன் விரைந்தான். நிர்மலாவைக் கடந்து இன்னும் ஒரு 'பிளாக்'கும் நடந்து சட்டென்று தெருவைக் கடந்தான். அங்கே சிக்னல் விளக்கு இருந்தது. சிக்னலைத் தாண்டி சிவப்பு 'வோல்வோ' நின்று கொண்டிருந்தது. வைரமூர்த்தி காத்திருந்தார்.

நிர்மலா சிக்னலுக்கு வந்தபோது 'நடக்காதே' என்ற எச்சரிக்கையை மதித்து நின்றாள். சிக்னல் மாறியது. அடுத்த பிளாக்குக்கு வந்த நிர்மலா அங்கு தெருவில் நின்றிருந்த சிவப்பு 'வோல்வோ'வைப் பார்த்தாள். 'வைரமூர்த்தியா? இந்த நேரத்தில் எங்கே....' என்று அவள் மூளை துரிதமாய் எச்சரிக்கையை அனுப்பியது. 'திரும்பி ஓடலாமா' என்று அவள் தயங்கிய போது, அவளை அந்தக் கறுப்பு ஆள் பலாத்காரமாகத் தள்ளிக் கொண்டே போய் 'வோல்வோ'வின் கதவைத் திறந்து உள்ளே தள்ளினான். தானும் விரைவாக ஏறிக் கொண்டான். 'கிரீச்' என்று கார் புறப்பட்டது.

எல்லாமே மிக மிக வேகமாக நடந்தன. நிர்மலா எதுவும் பேச முடியாத அதிர்ச்சியில் இருந்தாள். விருப்பப்பட்டாலும் பேச முடியாதபடி அவள் வாயில் பட்டையான டேப் போடப்பட்டிருந்தது.

வைரமூர்த்தி காரை நேராகத் தன்னுடைய அபார்ட்மெண்ட் வீட்டுக்கு ஓட்டிச் சென்றார். வழியில் எதுவும் அவர் பேசவில்லை. கறுப்பு ஆளும் ஒன்றும் பேசவில்லை.

காரை நிறுத்திவிட்டு வெளியே வந்தவர் சுற்று முற்றும் பார்த்தார். வேறு யாரும் இல்லை. உள்ளே இருந்தவனுக்கு ஜாடை காட்டினார். அவன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். நிர்மலாவை இறங்குமாறு சொன்னான். அவன் ஒரு பக்கமும், வைரமூர்த்தி இன்னொரு பக்கமுமாக நிர்மலாவை அழைத்துக் கொண்டு விரைந்தனர்.

கதவைத் திறந்து நுழைந்ததும் நிர்மலாவைச் சோபாவில் உட்காரச் சொன்னார் வைரமூர்த்தி. அந்த ஆளைப் பார்த்து, ''ரிச்சர்ட் மூர் உனக்குச் சேர வேண்டியதைத் தருவான். அடுத்த திட்டத்துக்கும் தயாரா இரு'' என்றார்.

அவன் ''ஓ.கே.'' என்று சுருக்கமாய்ச் சொல்லி விட்டுப் போனான்.

நிர்மலாவின் வாய் டேப்பை எடுத்தார். அவளை இன்னொரு அறைக்குள் அழைத்துச் சென்றார். ரங்கதுரை வந்த போது அவனுக்குக் காட்டிய அதே பூட்டப்பட்ட அறைதான். அந்த அறையில் நிர்மலா நுழைந்ததும் கதவை வெளியிலிருந்து பூட்டிக் கொண்டு வைரமூர்த்தி புறப்பட்டார்.

நிர்மலாவின் கண்கள் இருட்டுக்குப் பழகியதும், அங்கே ஓர் ஆள் படுக்கையில் இருப்பதைக் கண்டாள்.

'வீல்' என்று கத்தினாள். மயக்கமாய் விழுந்தாள்.

## 25

மறுநாள் காலை வைரமூர்த்தியின்

''கையில் காசு இல்லாம சாப்பிட்ட ஆசாமி எழுத்தாளராம் முதலாளி!''

''அப்போ அரைச்ச மாவையே அரைக்கச் சொல்லு!''

- பம்மல் கிருஷ்ணன்



ஆபீசுக்குள் நுழைந்த ரகுராமன் அப்படியே நின்றுவிட்டான்.

நிர்மலாவை அங்கே காணோம்!

'நேற்று சாயங்காலம் பார்த்துப் பேசி விட்டுத்தானே போனாள்? போகும்போது மறுநாள் வரப்போவதில்லை என்று சொல்லவில்லையே?'

'எதற்கும் வைரமூர்த்தியிடம் விசாரிக்கலாம்' என்று அவருடைய ஆபீஸ் கதவைத் தட்டினான்.

'யெஸ்.... ப்ளீஸ் கம் இன்'' என்ற குரல் வைரமூர்த்தியினுடையதுதான்.

''ஓ... யெஸ்... ரகுராமன்... நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கா... உங்க மாமாவிடமும் பேசி ஏற்பாடுகள் ஆகி விட்டன தெரியுமா?'' என்று பலமாகச் சிரித்தார்.

''அவர் ஒப்புக் கொண்டாரா?''

''அவரை ரங்கதுரை ஒப்புக் கொள்ள வைத்தான்.... ஓ.... ரங்கதுரை யாருன்னு கேக்கிறியா... நல்லதம்பின்னு பேர் மாத்திக்கிட்டவன்தான் ரங்கதுரை.'' அவருடைய சிரிப்பு அவனுக்கு எரிச்சலை மூட்டியது.

'அது ஏற்கெனவே தெரியும்.... ஆனால் நீ யார்? உன் உண்மைப் பெயர் என்ன?' நாக்கு நுனியில் கேள்விகள் வந்தன. தொண்டையை ஒருமுறை கனைத்துக் கொண்டான் ரகுராமன்.

''நிர்மலா இன்னக்கி வரவில்லையா? ஏதேனும் செய்தி வந்ததா அவளிடமிருந்து?''

''அவள் சித்தப்பா பையன் ஒருவன் வந்திருக்கிறானாம்.... அவனைப் பார்க்க நிர்மலா நியூயார்க் வரை போகணும்னு சொன்னாள். இன்று காலை முதல் இரயிலிலேயே புறப்படுவதாய்ச் சொன்னாள்.'' வைரமூர்த்தியின் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் தெரியவில்லை. அவருடைய பைப் மட்டும் புகையைக் கக்கிக் கொண்டிருந்தது.

''அப்படியா.... தேங்க் யூ... நான் பிறகு உங்களைப் பார்க்கிறேன்'' என்று புறப்பட்டான் ரகுராமன்.

''ரகு..... நாளைக்குத்தான் 'ஹோப்' வைரம் வெளியே வருகிறது. நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கட்டும்.'' கடுமையாகச் சொன்னார் வைரமூர்த்தி.

பதில் பேசாமல் அவரை ஒரு முறை பார்த்தான். அறையை விட்டு வெளியேறினான்.

'நிர்மலாவுக்கு அத்தைகள் இரண்டு பேர் இருக்கிறார்கள். சித்தப்பா இல்லை. கதை விடுகிறானே வைரமூர்த்தி... அடப்பாவி... என் நிர்மலாவை எங்கே வைத்திருக்கிறாய்? என்ன செய்தாய்?' என்று அவன் மனம் பதறியது.

நேராக எஃப்.பி.ஐ ஆபீசுக்குப் போய் ராபர்ட்டைப் பார்க்கலாம் என்று மெட்ரோ நிலையத்தை நோக்கி நடந்தான்.

அவனைத் தொடர்ந்து கறுப்பு அமெரிக்க ஆள் சென்றான்.



''அந்த பிச்சைக்காரன் திருவோட்டில் என்னவோ வாசகம் எழுதி வச்சிருக்கானே, என்ன அது?''

''நன்றி. மீண்டும் தருக!''

\- ஆலத்தம்பாடி ராஜகோபால்

குறுக்கு வழியில் போக நினைத்த ரகுராமன் ஒரு சந்துக்குள் நுழைந்தான். கிட்டத்தட்ட அந்த சந்தைக் கடக்குமளவு ரகுராமன் வந்தாயிற்று.

திடீரென்று அவனைப் பலமாக இழுத்தான் அந்தக் கறுப்பு அமெரிக்கன். எதிர்பாராதவாறு இழுக்கப்பட்டதால் ரகுராமன் தன்னைச் சுதாரித்துக் கொள்ள சில விநாடிகள் ஆயின.

'இந்த ஆள் எப்போது முதல் என்னைப் பின்தொடர்கிறான்?' என்று ஆச்சர்யப்பட்டுப்போன ரகுராமனை நோக்கி வந்தது ஒரு குத்து.

''ஆ.....'' என்று கத்திக் கொண்டே தடுமாறிப் பின்னால் விழப்போன ரகுராமனைத் தடுத்தது சுவர். அவன் தலை சுவரில் பட்டு பலத்த அடி.

ரகுராமனுக்குக் கண்கள் மங்கின. தலை சுற்றியது. திருப்பித் தாக்க வேண்டும் என்ற வெறியில் குத்து விடப் பாய்ந்தான். எதிரே இருந்த ஆள் கொஞ்சம் பின்னால் நகர்ந்தான். ரகுராமன் நிலை தடுமாறிக் குப்புற விழுந்தான்.

அவன் எழுந்தபோது கறுப்பு ஆளின் கையில் எட்டு அங்குலக் கத்தி ஒன்று பளபளத்தது. ரகுராமன் மேல் பாய்ந்தான் அந்த ஆள்.

ரகுராமன் இடது தோளில் கத்திக் குத்து விழுந்தது. அவன் கீழே சாய்ந்தான். இரத்தம் 'குபுக்'கென்று கொட்ட அவன் கண்கள் இருண்டன.

(தொடரும்)

"என்னங்க... எழுந்திருங்க... மணி நாலு ஆகிறது. 'மார்னிங் வாக்' போக வேண்டாமா?"

பாரியாள் அலாரம் மணியாக அடிக்க, அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்த நான், காலைக் கடன்களை முடித்து, காப் பிக்காகக் காத்திருந்தேன்.

பவ்யமாக என்னருகே வந்த பாரியாள், தன் கையிலிருந்த தம்ளரைக் கொடுத்த போது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"என்னடி இது! எப்போதும் வெறுந் தண்ணியக் கொஞ்சம் சுடவச்சுக் காச்சின பாலைக் கலந்து டிகாக்ஷன், சர்க்கரை இத்யாதியெல்லாம் போட்டுக் காப்பின்னு ஒரு திரவத்தத் தருவ. இன்னிக்கு என்ன டான்னா வெறுந் தண்ணீர்.... ஏன்.... தூக்க கலக்கத்துல மத்ததக் கலக்க மறந்துட் டியா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்ல. நேத் திக்கு 'வுமன்ஸ் ஈரா' பார்த்தேன். காலைல வாக் போகறதுக்கு முன்னாடி ஒரு தம்ளர் தண்ணீர் சாப்பிட்டா நல்லதுன்னு போட்டி ருந்தது. காப்பி சாப்பிடறது உசிதம் இல்லையாம்."

ஆபீஸ் லைப்ரரியிலிருந்து இந்த மாதிரி பத்திரிகைகளை வீட்டுக்குக் கொண்டு வருவதால் வரும் ஆபத்தை உணரலானேன். இனி வீட்டுக்கு 'வுமன்ஸ் ஈரா' கொண்டு வரக் கூடாது என்று தீர்மா னித்தேன்.

போருக்குப் புறப்படுகிற வீரன் போல மார்னிங் வாக்குக்கு உண்டான பனியன், ஷார்ட்ஸ், கான்வாஸ் ஷூ சகிதம் நான் கிளம்பும் நேரத்தில்.... "இந்தாங்க", என்று ஓடிவந்து தன் கையில் கொண்டு வந்த கயிற்றை என் கையில் திணித்தாள்.

"இது என்ன கயிறு - தொங்கற துக்கா?"

"இல்லீங்க - ஸ்கிப்பிங் பண்றதுக்கு. ஸ்கிப்பிங் பண்ணினா ரத்த ஓட்டம் நன்னா இருக்குமாம்."

"இதுவும் 'வுமன்ஸ் ஈராவா?"

"இல்லீங்க - ஈவ்ஸ் வீக்லி - பக்கத்து வீட்ல வருது."

"ஓஹோ.... வுமன்ஸ் ஈராவும், ஈவ்ஸ் வீக்லியும் எக்ஸ்சேஞ்சா?"

பக்கத்து வீடு, ஷார்ட்ஸ் சகிதம் வந்து நின்றது.

"என்ன மிஸ்டர் ராஜன், ரெடியா?"

"நௌ ஐ ஆம் நடராஜன் அண்ட் நாட் ராஜன். லையன்ஸ் கிளப்காரங்க பேருக்கு முன்னாடி 'லையன்' சேர்த்துக்கிறாப் போல் நம்ம வாக்கர்ஸ் கிளப்பிலேயும் ஒவ்வொரு உறுப்பினரும் பேருக்கு முன் 'வாக்கர்' என்று போட்டுக்கலாம்னு General body meetingல தீர்மானிச்சிருக் கோம். அதன்படி ராஜனாகிய நான், 'நடராஜன்', ஆனேன்."

# மார்னிங் வாக்

"அது சரி சார்! என் பேர் சீதாராமன். 'நட சீதாராமன்' என்றால் நடடா போலீஸ் ஸ்டேஷனுக்கு என்கிறமாதிரி அசிங்கமா இருக்கு. கிளப்புல நீங்க டிஸைட் பண் ணிட்டா எப்படி? உறுப்பினர்கள் எல்லா ரோட விருப்பத்தையும் தெரிஞ்சிக்க ணும்."

"புரிஞ்சுக்காம சண்டைக்கு வந்தா எப்படி? 'நட' என்கிற வார்த்தை என் பேருக்கு கரெக்டா பிஃட் ஆறது. நீ வேணும்னா டீசண்டா 'வாக்கர் சீதா ராமன்னு', சொல்லிக்கோ."

"சரி.... சரி.... காலங்காலைல உன் னோட எதுக்கு சண்டை. சீக்கிரம் கிளம்பு. எல்லோரும் இந்நேரம் காந்தி சிலையருகே அசம்பிள் ஆயிருக்கப் போறாங்க", என்று

தமிழ்ஹாஸா

சீதாராமன் கூற நான், என் பைக்கை கிக்கினேன்.

வண்டி சத்தத்தையும் மீறி எதிர்வீட்டுக் கிழவியின் சாபம் என் காதில் விழுந்தது.

''சனியங்க! தடி உலக்கை மாதிரி இருந்துண்டு என்ன அரைக்கால் சட்டையோ? காலங் கார்த்தால வாசலுக்குக் கோலம் போடக் கூட வெளியே வர முடிய வில்லை.''

ரியர் வ்யூ மிர்ரரில் சீதாராமனின் நாதமுனி, வாக்கர் சீனா, வாக்கர் சங்கு பாணியெல்லாம் நிலாவில் நடக்கிற மனிதன் மாதிரி புஃல் வாக்கிங் Suitல் இருந்தார்கள். எங்கள் வாக்கர் கிளப் போன மீட்டிங்லதான் முடிவு பண்ணினோம் 'ஸ்விம் சூட்' போல 'வாக் சூட்' தேவையென்று. நடக்கும் போது கால் இடறி விழலாம். அப்படி விழுந்தால் கால் முட்டி இரண்டும் தப்பிக்க முட்டிக் கவசங்கள். எப்படி இவர்களால் இத்தனை குறுகிய காலத்தில் புஃல் வாக் சூட்டோடு தயாராக



சிறுத்து போன முகத்தைப் பார்த்தேன்.

பாட்டியின் திட்டு உண்டாக்கிய வேதனையை விட, எனக்கு சீதாராமனின் சிறுத்துப் போன முகம் உண்டாக்கிய சந்தோஷம் தான் அதிகமாயிருந்தது. ஏனென்றால் சீதாராமனைப் பார்க்கும் போது நான் Lesser தடி உலக்கை. சோர்ந்து போன சீதாராமனை உற்சாகப்படுத்தும் வகையில் நான், ''நல்ல காரியம் பண்ணப் போகும் போது நாலு பேர் நாலு விதமாகத்தான் பேசுவார்கள். இதற்கெல்லாம் கவலைப் படக் கூடாது'', என்று தேற்றினேன்.

காந்தி சிலையருகே வண்டியைப் பார்க் செய்தபோது வாக்கர் நானா, வாக்கர் முடிந்தது என்று நான் யோசித்துக் கொண்டிருக்கையில், சட்டென்று எல்லோரும் 'ஹமாம்' போட்டு புத்துணர்ச்சி பெற்றவர்களாக அடிவயிற்றிலிருந்து 'ஹாய்' என்று ஒருமித்த குரலில் கத்த, குரல்... சென்ற திசையை நோக்கினால் ஒய்யாரமாக மார்னிங் வாக்கிற்கு நைட் பூரா மேக்அப் செய்து தயாரானவளாய் வந்து கொண்டிருந்தாள் Walkress ரேணு. *(ஆண்களுக்கு Walkerனா பெண்களுக்கு Walkress தானே!)*

''ஹாய் நட்ராஜன்! *(நட என்றில்லாமல் Nut ஆக்கிவிட்டாள்)* You know one thing. Only our walkers club members have the liberty to call me ரேணு next to my

husband. ஓ.கே. ஷல் வி ஸ்டார்ட் வாக்கிங்?''

புரட்சித்தலைவியின் கட்டளைக்குக் கீழ்ப்படியும் அமைச்சர்கள் போல, நாங்கள் ரேணுவைத் தொடர்ந்து நடக்கத் தயாரானோம். நாலு அடி எடுத்து வைத்திருப்போம் - ரேணு நிற்க நாங்கள் நின்றோம்.

''நட்ராஜன் - இன்னிக்குக் காத்தே இல்ல - ரொம்ப Sweat ஆறது. வாக் பண்ற துக்குப் பதிலா, உட்கார்ந்தபடியே நாம வாக்கிங்கோட முக்கியத்துவத்தப் பத்திப் பேசலாமே.''

என்னுடைய விருப்பமின்மையை வெளிக் காட்டுவதற்குள்ளாக, எல்லோரும் ரேணுவைச் சுற்றி உட்கார்ந்திருந்தனர்.

ரேணு பேச ஆரம்பித்தாள். ''நம்ம கிளப்பில் உள்ளவங்க தான் பீச்ல வாக் போகணும்னு ரூல் போடணும்.''

''அதெப்படி நாம கட்டுப்படுத்த முடியும்?'' நாணு எழுந்தான்.

''நான்சென்ஸ்!'' சினிமா டைரக்டர் போல் பாதியில் கட் செய்தாள். ''நிறையப் பேர் வாக் செய்ய இங்கு வந்து இந்த இடத்தையே Pollute பண்ணிட்டாங்க.''

வாக்கர் சீனு எழுந்தான்.

''மேடம்....''

''நோ! கால் மீ ரேணு.''

(தயக்கத்துடன்) ''ரேணு! நம்ம முருக பூஷண் நடக்கறதத் தடுத்திட்டாப் போதும். நாலு லாரி லோடு வெயிட்டை வச்சுண்டு அவன் நடந்தாக் காத்து எப்படி வரும். நடக்கிற இடம்தான் பாழ். புதுசா ரோடு போட்டா வேணும்னா உருள விடலாம்.''

சீதாராமன் ஆவேசமாக எழுந்தார் - ''தனிப்பட்ட முறைல தாக்கறது நியாய மில்ல. முருகபூஷணத்தின் முதுகு பின் னாடி பேசறான். தில் இருந்தா அவன் எதிரே பேசட்டுமே. விலா எலும்பை ஒடச் சிடுவான்.''

''நான் அவனைச் சொன்னா உனக்கு ஏண்டா கோபம் வர்றது. உனக்குக் கை மாத்தா ஏதாவது கடன் கொடுத்திருக் கானா?''

''இது அநாவசியமான பேச்சு. உன் பவுசு எனக்குத் தெரியாதா. நீ மார்னிங் வாக் வர்றதே காலங் காலைல கடன் காரன்களிடமிருந்து தப்பிக்கத் தானே. முருகபூஷணம் உன்னைப் பிடிக்க இங்கு வரான். அது உனக்குப் பிடிக்கல.''

''மேடம்! இவன் என்னைச் சொல்லப் போயிட்டானே - இவன் மார்னிங் வாக் எதுக்கு வரான் தெரியுமா? காலைல எழுந் தான்னா பக்கெட்ல தண்ணி அடிச்சு நிரப்பு, பால் வாங்கிண்டு வா, தேங்கா பத்தை வாங்கிண்டு வா, கறிகாய் நறுக்கிக் கொடுன்னு பெண்டாட்டி தொந்தரவு தாங்காம அதிலிருந்து தப்பிக்க வர்றான். அதுதான் போகட்டும். இங்கு வந்து 'வாக்'காவது பண்றானா? அதுவும் இல்ல. நாதமுனி வாங்கிண்டு வர்ற ஹிண்டு பேப்பரை ஓசில முழுசா ஒரு வரி விடாம படிச்சுட்டுப் போறான்.''

ஆக இன்றைய 'மார்னிங் வாக்', Walk வாதத்துடன் நடந்து முடிந்தது - சாரி - உட்கார்ந்தபடியே முடிந்தது.

---

''இருந்தாலும் சாஷே மோகம் இந்த அளவுக்குப் போகக் கூடாது?''

''ஏன், என்னாச்சு?''

''கல்யாணத்துல சிக்கனமா சாம் பார், ரசம், பாயசம் எல்லாம் 'சாஷே' பாக்கெட்ல கொடுத்து அனுப்பிட் டாங்க!''

- அகத்தியான்பள்ளி ராம்ஜி





''போகும் போது எங்க போறேன்னு யார் கேட்டாலும் எனக்குக் கன்னாபின் னான்னு கோபம் வந்துடும்!''

''அது சரி, அதுக்காக நீ கண்டக்டரை அடிச்சது கொஞ்சம் கூடச் சரியில்லை!''

- வேதபுரி எஸ். ரமேஷ்

வடக்கு வாசல் :

# பன்னாட்டுப் பொருட்காட்சியிலும் ஜெ.படங்கள்!



தில்லியில் வருடாந்திரச் சடங்கான பன்னாட்டு வர்த்தகப் பொருட்காட்சி நவம்பர் 14 முதல் 24 வரை இந்த வருடமும். மக்கள் லட்சக்கணக்கில் போய் சோலே பட்டூரேயும், சமோஸாவும் சாப்பிட்டு விட்டுப் பெரிய பலூன்களை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தார்கள். பண வசதியைப் பொறுத்து முப்பத்தாறாயிரம் ரூபாய் கொடுத்து அலங்காரத் தேக்குக் கட்டில் கூட வாங்கலாம். மற்றபடி இங்கே பன்னாட்டு வர்த்தகம் மட்டும் நடப்பதில்லை என்பது விஷயமறிந்தவரின் வருத்தம்.

இதில் தமிழ்நாடு பெவிலியன் வெளியே பிரம்மாண்ட பொங்கற்பானையுடனும் உள்ளே வழக்கமான அம்சங்களுடனும் காட்சி தந்தது. முந்நூறுக்கும் அதிக விலையிலும் காஞ்சி காட்டன் புடைவைகளை இவ்வூர் மகளிர் அள்ளிக் கொண்டு போனார்கள். கவரிங் நகைகளுக்கும் அதே அளவில் வரவேற்பு. ஒரே ஒரு எம்.ஜி.ஆர். படமும் நிறைய ஜெ. படங்களும் இருந்தன. ஜெ. படத்தைக் காட்டி உள்ளூரில் வோட்டு வாங்கலாம்; பன்னாட்டு வர்த்தகத்தைப் பெருக்க முடியுமா என்ன?

## ஓய்வுபெற்ற 'மாஜிக்'

'மாஜிக் ஜான்ஸன்' - அதிபர் ஜார்ஜ் புஷ் முதல் வாண்டுகள் வரை இந்தக் கூடைப்பந்தாட்ட வீரரின் விசிறிகள். களத்தில் இவர் இறங்கினால் இவர் கைக்குப் பந்து எப்போது வருகிறது, கூடைக்குள் எப்படி விழுகிறது என்பதே தெரியாது. அத்தனை சாகஸம். அதனால் வந்ததுதான் இவர் பெயரில் 'மாஜிக்'.

காலணி முதல் குளிர்பானம் வரையிலான விளம்பரங்களில் நடிப்பதன் மூலமும் வருடம் சுமார் ஐம்பது மில்லியன் டாலர் சம்பாதித்து வந்தார். இப்படிப் புகழின் சிகரத்திலிருக்கும் போது தமது ஓய்வை அறிவித்து விட்டார். காரணம்: AIDS.

எய்ட்ஸ் வியாதி இவரைத் தாக்கி விடவில்லை இன்னும். ஆனால் ரத்தத்தில் எய்ட்ஸ் நோயை உண்டாக்கும் எச். ஐ. வி. வைரஸ் கிருமிகள் இருப்பதாக டாக்டர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

டெலிவிஷன் திரையில் மிகத் திடமான முகத்துடன் தோன்றிய ஜான்ஸன், ''இனிமேல் மக்களிடையே எய்ட்ஸ் பற்றிய விழிப்புணர்வு ஏற்படப் பாடுபடுவேன்'' என்று அறிவித்திருக்கிறார்.

ஆனால் இவர் ஓய்வுபெற்ற செய்தியே ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்தியிருப்பது உண்மை. ''ஜான்ஸனை இந்தக் கிருமிகள் தாக்குமானால், நாம் எம் மாத்திரம்!'' என்கிறார்கள் இளைஞர்கள்.

## வெள்ளித் திரையில் நேரு

நேருவின் வாழ்க்கை முழு நீளத் திரைப்படமாக உருவாகி, கடந்த நவம்பர் 14 அன்று தில்லியில் காண்பிக்கப்பட்டது. 'நேரு- தி ஜுவல் ஆப் இண்டியா'' என்ற தலைப்பில் ஆங்கிலம் மற்றும் இந்தியில் இதைத் தயாரித்திருப்பவர் கிரண்குமார்.

பிரபல மேடை நடிகர் பிரதாப் ஷர்மா நேருவாக நடித்திருக்கும் இந்தப் படம் ஆட்டன்பரோ எடுத்த 'காந்தி' ஏற்படுத்திய பாதிப்பின் விளைவு.

திரையரங்குகளில் வெளியாவதோடு, டெலிவிஷனிலும் காண்பிக்கப்படுமாம். மிக அதிகச் செலவில் எடுக்கப்பட்டுள்ள (எவ்வளவென்று சொல்ல மாட்டாராம்!) இப் படத்தை அதற்குள்ளேயே பல வெளிநாட்டு டீ.வி. நிலையங்கள் விலைக்கு வாங்கியிருக்கின்றனவாம்.

- இமயவரம்பன்

# காதலெனும் வானவில்

**6**

ரேடியோ நிகழ்ச்சி முடிந்து அது ஒலிபரப்பும் ஆகி எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன. அந்த நிகழ்ச்சி நடந்தவிதமே படு தமாஷ். திடீரென்று அழைக்கப்பட்டதால் மாணவ, மாணவிகள் சற்றுத் தடுமாற் றத்துடன் நடந்து கொண்டார்கள். புத்தகத்திலிருந்து குறிப்பெழுதிக் கொண்டு வந்து, அதைப் பார்த்து, அவர்கள் பேசினது ஏதோ வேஷம் போட்டு நடிப்பது போல் தோன்றிற்று மீராவுக்கு.

மைதிலியின் சொல்லுக்குக் கட்டுப்பட்டவளாய் அவள் மட்டும் கையில் குறிப்பு ஏதும் வைத்துக் கொள்ளாமல் பேசினாள். மற்றவர்களுடைய விவாதம் அலுப்பைத் தந்த போது, திடீரென்று இடையில் புகுந்து, ''வானவில்லில் எத்தனை நிறங்கள்?'' என்றாள். அவர்கள் விழித்து, இது என்ன பிதற்றல் என்பது போல் அவளைப் பார்த்துப் பதில் அளித்ததையும் அவள் தொடர்ந்து அன்று ஹரி சொன்னதைக் கிளிப்பிள்ளை மாதிரி அவர்களுக்கு எடுத்துச் சொன்னதையும் நினைத்து நினைத்துப் பிறகு சிரிப்பு வந்தது. இதை ஹரியிடம் சென்று சொல்ல வேண்டும் என்று நினைக்கையில் நிகழ்ச்சியைக் கேட்டு விட்டு அவனே அவளுக்கு டெலிபோன் செய்தான்.

''உனக்குச் சுயமா யோசனை செய்யத் தெரியாதுன்னு எனக்குத் தெரியும். ஆனா இப்படி மத்தவங்க பேச்சையும் உருப் போடுவேன்னு தெரியாது'' என்றான்.

அவள் விழுந்து விழுந்து சிரித்தாள். ''நீ பேசறதெல்லாம் அப்படி மேதாவித்தனமா இருக்கும் போது, நா காப்பி அடிக்காம எப்படி இருக்கிறது?''

''யாருடீ அது?'' என்று அம்மா அவள் பேசி முடித்ததும் கேட்டாள்.

இன்னும் அடங்காத சிரிப்புடன் மீரா பதில் சொன்னாள்.

''எங்க மேம் மைதிலி ஜெயராமனுடைய பிள்ளை. பிலாஸஃபி எம். ஏ. படிக்கிறான். ஹி இஸ் ஸோ க்யூட்!''

''உனக்கு எல்லாரும் க்யூட்!'' என்றாள் அம்மா சுவாரஸ்யமில்லாமல். ''முருகேசனையும் க்யூட்ங்கறே!''

''ஆமாம் அவனும்தான். இஸ்திரி போடறவனா இருந்தா என்ன குறைஞ்சு போனான்? அம்மா, அமெரிக்காவிலே நீ இப்படிப் பேசிண்டிருக்கல்லே!''

''அமெரிக்கா வேற தேசம். அங்கே இருக்கிற சமூகம் வேற.''

''எல்லாரும் மனுஷங்கதான். நா அமெரிக்கன்; நீ இந்தியன்; இவன் நீக்ரோன்னு வித்தியாசப்படுத்திச் சொல்றதெல்லாம் கூட உன் பாவனையினாலே.''

இதுவும் ஹரியின் வார்த்தைகள் என்று நினைவு வந்து அவள் நிறுத்தினாள்.

அம்மா விஷயத்தை மறந்து சிரித்தாள். ''இப்படியெல்லாம் தமிழிலே பேச எங்கே கத்துண்டே?''

''அந்த ஹரியை ஒருநாள் போய்ப் பாரு. நீயும் இப்படிப் பேச ஆரம்பிப்பே.''

''நா எதுக்குப் போய்ப் பார்க்கணும்? அவனை இங்கே வரச் சொல்லு'' என்ற அம்மாவின் குரலில் அளவுக்கு அதிகமான ஆர்வம் தலைகாட்டிற்று.

''அவனை வரச் சொல்றது அத்தனை சுலபமில்லே. யாராவது அழைச்சிண்டு வரணும். அவனுக்குக் கண் தெரியாது.''

''அடப் பாவமே!'' என்றாள் அம்மா அதிர்ந்து. ''அவனா எம். ஏ. படிக்கிறான்?''

''ஆமாம், ஆனா பாவம்னு சொல்றது அவனுக்கும் பிடிக்காது; அவன் அம்மாவுக்கும் பிடிக்காது. அவனைப் பார்த்தியானா குருடன்னே தோணாது. நானே எதேச்சையாத்தான் கண்டுபிடிச்சேன்.''

அன்றைய தினத்தின் நினைவு மீண்டும் மீண்டும் வந்தது. முக்கியமாக அவனது நிலையைப் புரிந்து கொள்ளாமல், தான் நடந்து கொண்ட விதத்தை நினைத்து, செய்த பரிகாசத்தை நினைத்து வெட்கமேற்பட்டது. குற்ற உணர்வு வதைத்தது. ஆனால் மறுபடி ஹரியுடன் பேசும் போது அதற்கான வருத்தத்தை அவள் தெரிவிக்க

வாஸந்தி

வில்லை. தெரிவிப்பது அதிக முட்டாள் தனம் என்று தோன்றிற்று. உண்மையில் அவனுடன் பேசும் போது, அவனது சிரிப்பையும் ஹாஸ்ய உணர்வையும் பார்க்கும் போது, அவன் அங்கஹீனமானவன் என்கிற எண்ணமே தோன்றுவதில்லை.

இப்பொழுது டான்ஸ் வகுப்புக்குச் செல்வதற்காக நந்தினியை அழைக்க, அவள் வீட்டை நோக்கி நடக்கையில் மீண்டும் ஹரியின் நினைவு வந்தது. இன்று காலை அவன் ஃபோன் செய்து, ''வீட்டுக்கு வாயேன்'' என்றான்.

''இன்னிக்கு டான்ஸ் கிளாஸ் இருக்கே'' என்றதற்கு, ''என்ன கத்துக்கறே இப்ப?'' என்றான். இவனுக்கு எப்படி விளக்குவது என்கிற அனுமானத்துடன் ''இன்னும் அலாரிப்புதான்'' என்றாள். ''அலாரிப்பை நல்லா ஆடத் தெரிஞ்சா மத்ததெல்லாம் சுலபமா வரும். எல்லாத்துக்கும் வேண்டிய அடிப்படை ஞானம் மாதிரி'' என்றான்.

இவன் எப்படி இப்படிப்பட்ட வியாக்கியானங்கள் கொடுக்கிறான் என்று அவளுக்குச் சிரிப்பு வந்தது.

''நீ ஒரு தாத்தா'' என்றாள்.

அவன் சிரித்தான், ''நான்தான் சொன்னேனே, எனக்குப் பிறக்கும் போதே வயசாயிட்டதுன்னு.''

பிறகு மீண்டும் சிரித்தான். ''வயசாயிட்டதே தவிர நிறைய ஆசைகள் உண்டு. எனக்கு ஒரு நாளைக்கு அந்த அலாரிப்பை ஆடிக் காண்பி.''

''ஓ.கே.!'' என்றாள் அவள் உற்சாகமாக. ஆடினால் நீ எப்படிப் பார்ப்பாய் என்று கேட்கவில்லை. இப்போது யோசித்துப் பார்க்கும் போது அந்தக் கேள்வி மனத்தில் எழவேயில்லை என்பது ஆச்சரியமாக இருந்தது. பார்க்க முடியாவிட்டாலும் அவன் ரசிப்பான் என்று தோன்றிற்று.

நீலமும் பச்சையும் மஞ்சளும் எப்படியிருக்கும் என்று தெரியாமலேயே வானவில்லை அவன் மனக்கண்ணில் பார்ப்பது போல. ஆகாசத்துக்கும் பூமிக்கும் வித்தியாசம் தெரியாதவன் - காதையும் மூக்கையும் வைத்துக் கொண்டே உலகத்தை அளக்கிறான் என்று தோன்றிற்று. கண்ணை மூடிக் கொண்டு லலிதாங்கி ''தானம் போச்சு'' ''முழங்கை இறங்குது'' என்பது போல அவனும் சொன்னால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

வகுப்புக்குக் கிளம்பத் தயாராகாமல் நந்தினி உட்கார்ந்திருந்தாள்.

''டான்ஸ் கிளாசுக்கு இனிமே போக வேண்டாம்ங்கறாங்க அம்மா'' என்றாள்.

''ஏன்?''

நந்தினி குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னாள்.

''வரப் போகிற பரீட்சைக்கு இப்பவே தொட்டுப் படிக்கணுமாம். நேரத்தை வேஸ்ட் பண்ணக் கூடாதாம்.''



இதற்கு என்ன பதில் சொல்வது என்று புரியாமல் மீரா சிரித்தாள்.

''வாரத்திலே மொத்தம் மூணு மணி நேரம்தானே?'' என்றாள் அதே கிசுகிசுத்த குரலில்.

''யார் சொல்றது அவுங்களுக்கு? சொன்னாலும் ஏத்துக்க மாட்டாங்க. அவுங்க புடிச்ச புடியை விட மாட்டாங்க.''

நந்தினி மிகுந்த வெறுப்புடன் பேசுவது போல் இருந்தது. படிப்பில் இவள் சுமார் தான். ஆனால் நாட்டியத்தில் ஆர்வம் உள்ளவள். சந்தோஷமாக ஆடுபவள். வாரத்தில் கிடைக்கும் மூன்று மணி நேர சந்தோஷத்தை நிராகரிப்பதனால் இவள் படிப்பில் அதிக கவனம் காட்டி விடப் போகிறாளா? இவள் பேசும் விதத்தைப் பார்த்தால் இருக்கும் கவனமும் போய் விடும் என்று தோன்றிற்று.

''எப்படியாவது சரிக்கட்டிப் பாரு'' என்று மெல்லச் சொன்னாள். ''பரீட்சைக்காக மீரா எந்த க்ளாஸையும் நிறுத்தல லேன்னு சொல்லு.''

''அதைச் சொன்னா நான்தான் மாட்டிக்குவேன்!'' என்று நந்தினி சிரித் தாள். ''மீரா மாதிரி நீ கிளாசிலே ஃபஸ்ட் வர்றியாம் பாங்க.''

''வகுப்புக்கு நேரமாகி விட்டது'' என்று மீரா கிளம்பிய போது தோட்டத்தில் நந்தினியின் அம்மா ஹோஸ் பைப்பைப் பிடித்துக் கொண்டு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தாள்.

''டான்ஸ் கிளாசுக்குத்தானே, நந்தினி வர மாட்டா'' என்றாள்.

''ஏன் ஆன்ட்டி? பரீட்சைக்காகவா?''

''அதுவும் ஒரு காரணம்தான்.''

வேறு என்ன காரணம் என்கிற குழப்பத்துடன் மீரா தயங்கி நிற்கையில், ''உங்க டான்ஸ் டீச்சரைப் பத்தி என்னவோ கேள்விப்பட்டேன். ஒண்ணும் பிடிக்கல்லே. எதுக்கு அந்த மாதிரி இடத்துக்கெல்லாம் அனுப்பணும்னு தோணிப் போச்சு'' என்றாள் அவள்.

மீரா அதிர்ந்து போனாள்.

''லலிதாங்கி டீச்சரைப் பத்தியா? ரொம்ப நல்லவங்களாச்சே? கொஞ்சம் ஸ்ட்ரிக்டா இருப்பாங்க; அவ்வளவுதான்.''

''ஆமாம், அவ ஸ்ட்ரிக்டும் அவளும்! சொந்த வாழ்க்கையிலே லூஸு''ன்னு சொல்லிக்கிறாங்க.''

அவளுடைய சொந்த வாழ்க்கை எப்படியிருந்தால் நமக்கென்ன என்று கேட்க நினைத்துக் கேட்காமல் ''எனக்கு அதெல்லாம் தெரியாது ஆன்ட்டி'' என்று விரைந்து நடந்தாள்.

நந்தினியின் அம்மாவை இனிமேல் சந்திக்கவே கூடாது என்று கோபம் வந்தது. ஊரில் இருக்கும் பெண்களையெல்லாம் பழிப்பதைத் தவிர இவளுக்கு வேறு வேலை கிடையாது என்று தோன்றிற்று. இப்படிப்பட்ட அம்மாவுடன் எப்படி நந்தினி காலம் தள்ளுகிறாள் என்று ஆச்சரியமாக இருந்தது.

லலிதாங்கியைக் குறை சொல்வது தெய்வ நிந்தனைக்கு ஒப்பானது. நாட்டியத்திற்காகவே தன்னை அ ர் ப் ப ணி த் து க் கொண்டவள். அதைப் பற்றியே எப்பவும் சிந்தனை, பேச்சு, ஆராய்ச்சி என்று வாழ்பவள். அவளைப் பற்றி அவதூறு சொல்ல வேண்டுமென்றால் எத்தனை சின்னத்தனம் இருக்க வேண்டும் என்று ஆத்திரம் வந்தது. அவளிடம் அதிகமாகத் திட்டு வாங்கும் மாணவிகளின் முணுமுணுப்பை அவள் கேட்டிருக்கிறாள். ''சபாஷ்னு ஒரு நாளாவது வாயிலே வருதா? காதல்லே தோல்வி கண்ட ஏமாத்தத்தை நம்ம மேலே காட்டறாங்க.''

இந்த விஷயமே அவர்களது கற்பனையாக இருக்கலாம். ஏன் தோல்வி அடைந்தது என்று யாருக்கும் தெரியாது. கல்யாணம் செய்து கொள்ளாமல் தனியாக இருப்பதால் இவர்களாகக் கட்டி விட்ட கதை இது என்று மீரா நினைத்துக் கொள்வாள். அன்று யாரோ ஓர் ஆண் அவள் பக்கத்தில் வண்டியில் அமர்ந்திருந்ததும், அவளுடைய பாய் ஃப்ரெண்டாக இருக்கலாம் என்று, தான் வேடிக்கைக்குச் சொன்னதும் இப்பொழுது நினைவுக்கு வந்தது.

''சொந்த வாழ்க்கையிலே லூஸ்னு சொல்லிக்கிறாங்க.'' இது ரொம்பவும் விஷமத்தனமான, மோசமான பேச்சு என்று மீராவுக்கு மறுபடி கோபம் வந்தது. டீச்சருக்கு ஒரு சினேகிதர் இருந்தால் இவளுக்கு என்ன வந்தது? நந்தினியை எப்படி அது பாதிக்கும்? பாதிக்கும் என்று நினைப்பதே கேவலம் என்று யோசித்தபடி டான்ஸ் வகுப்புக்குள் நுழைந்த போது, லலிதாங்கி கட்டையைத் தட்டத் துவங்கியிருந்தாள். அவளருகில் அன்று வண்டியில் உட்கார்ந்திருந்த தலைநரைத்த ஆண் புன்னகையுடன் அமர்ந்து இருந்தார். மீரா லலிதாங்கியின் முன் மண்டியிட்டு வணங்கி, மற்ற மாணவிகளுடன் சேர்ந்து கொண்டாள்.

லலிதாங்கியின் முகத்தில் இன்று ஆச்சரியகரமான மாறுதல் தெரிந்தது. இன்றும் கை ஆவேசமாகத் தட்டிற்று. ஆனால் அதில் ஓர் உற்சாகம் துள்ளுவதாகத் தோன்றிற்று. சொல் கட்டில் வழக்கமாகத் தென்படும் எரிச்சலும் பொறுமையின்மையும் இன்று இல்லை. நிறைவோ, சந்தோஷமோ தொனித்தது. அவளுடைய

சந்தோஷம் மாணவிகளையும் தொற்றிக் கொண்டது போல், கிட்டத்தட்ட எந்தத் தப்பும் செய்யாமல் பயிற்சி நடந்தது.

''என்ன, இன்னிக்கு, என் கண்ணே பட்டுடும் போலேயிருக்கே?'' என்று லலிதாங்கி மாணவிகளைப் பார்த்துச் சொல்லி விட்டு நண்பர் பக்கம் திரும்பி ஒய்யாரமாகச் சிரித்தாள்.

பயிற்சி தொடர்ந்த போது லலிதாங்கி இடையிடையே அவரைப் பார்த்துப் புன் சிரிப்புச் சிரிப்பதும் பதிலுக்கு அவர் தலையசைப்பதும் ஒரு மௌன சம்பாஷணை போல் இருந்தது. டீச்சர் இன்று நிச்சயம் புதிய பிறவி எடுத்திருந்தாள் என்பதில் மீராவுக்குச் சந்தேகம் இல்லை. உள்ளுக்குள் இருந்து வெளிப்பட்ட பிரகாசம் போல் இருந்தது. அவளை சந்தோஷப் படுத்திற்று. லலிதாங்கிக்கு இந்த மனிதரிடம் நிறைய அன்பிருக்க வேண்டும், இப்படிப்பட்ட ரசாயன மாறுதல் ஏற்படுவதற்கு. அமெரிக்க விவேகத்துடன் மீரா தனக்குள் சொல்லிக் கொண்டாள். ''ஷி இஸ் இன் லவ்.''

'சீச்சீ, இந்த வயசிலா!' என்று அன்று நந்தினி முகத்தைச் சுளித்தது நினைவுக்கு வந்தது. நந்தினியின் பேச்சுக்கு அவள் அம்மாதான் காரணம் என்று தோன்றிற்று. பத்து வருஷங்கள் கழித்து நந்தினி அவள் அம்மாவைப் போலவே மற்ற பெண்களைப் பற்றிச் சரடு திரிக்கப் போகிறாள் என்கிற கற்பனையே பயங்கரமாக இருந்தது.

**ப**யிற்சி முடிந்து எல்லாரும் கிளம்பத் தயாராகும் போது மாணவிகள் சதங்கையைக் கழற்றும் சாக்கில் குனிந்தபடி தங்களுக்குள் குசுகுசுத்துச் சிரிப்பது மீராவுக்கு எரிச்சலை ஏற்படுத்தியது. இன்று நந்தினிக்காகக் காத்திருக்க வேண்டியிராததால் ஷூ அணிந்தவுடன் வேகமாக வெளியேறி நடந்தாள்.

''மீரா!''

லலிதாங்கியின் குரல் கேட்டு அவள் திரும்பினாள். லலிதாங்கி தன்னுடைய நண்பருடன் நின்றிருந்தாள். மீராவைப் பார்த்து அவர், ''ஹல்லோ!'' என்றார். ''நியூயார்க்லே இருந்த ஸ்ரீனிவாசனுடைய பெண்ணா நீ?''

''ஆமாம்'' என்றாள் மீரா வியப்புடன்.

''என் பெயர் நாகராஜன். வாஷிங்டனில் இருக்கிறேன். உங்கப்பாவை நன்றாகத் தெரியும். எப்படியிருக்கான் ஸ்ரீனி? இந்தியாவில் சந்தோஷமாக இருக்கிறான் என்று நினைக்கிறேன்'' என்றார் அமெரிக்க ஆங்கிலத்தில்.



''எந்த ஊர் போனாலும் எது சீப்பாக் கிடைக்குதோ, அதை வாங்கிக்கிட்டு வந்துடுவேன்!''

''வேதாரண்யம் போனீங்க போலிருக்கே...!''

''ஊம்... இந்த ஏ. கே. 47 எல்லாம் அங்க வாங்கினதுதான்!''

- வேதபுரி எஸ். ரமேஷ்

''ஓ ஷ்யூர்!'' என்றாள் அவள் தனது வழக்கமான உற்சாகத்துடன். ''வீட்டுக்கு வந்து பாருங்க. ஆளே மாறிப் போயிட்டார். வீட்டிலே இருக்கும் போது விபூதியும் பூஜையுமா அமர்க்களப்படுத்தறார். அமெரிக்காவை மறந்துட்டார்னு நினைக்கிறேன்.''

புன்னகையுடன் கேட்ட நாகராஜன் லலிதாங்கியைப் பார்த்தார். அந்தப் பார்வையில் ஏதோ சங்கேதம் இருந்தது போல் இருந்தது.

''அப்படியா?'' என்றார் மீராவிடம். ''நீ மறந்துட்டியா?''

''இல்லே, என்னாலே மறக்க முடியல்லே'' என்று அவள் சிரித்தாள். ''எதுக்கு மறக்கணும்? அப்பா கூட மறக்க முயற்சி பண்ற மாதிரிதான் இருக்கு.''

நடராஜன் மீண்டும் லலிதாங்கியைப் பார்த்து சங்கேதமாகச் சிரித்தார். அருகில் வந்து மீராவின் தோளை அணைத்து, ''சுலபமா மறக்க முடியாதுதான்'' என்றார். ''உங்கப்பாவை விட உனக்கு அதிக கஷ்டமா இருக்கும். ஆனா போகப் போக அட்ஜெஸ்ட் ஆயிடும். உனக்காகத்தான் ஸ்ரீனி இந்தியாவுக்கு வந்தான்.''

ரொம்ப நிச்சயமாக அவர் அப்படிச் சொல்வது திகைப்பை ஏற்படுத்திற்று. எதிர்பாராத திக்கிலிருந்து தாக்கப்பட்டது போல். தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''எனக்கு அதைப் பத்தித் தெரியாது. நீங்க வீட்டுக்கு வாங்க'' என்று சொல்லி விட்டு நடக்கும் போது, குருட்டு நிலை என்பது இப்படித்தான் இருக்கும் என்று தோன்றிற்று.

(தொடரும்)

# மனிதாபிமானம் மறக்காத போலீஸ் அதிகாரி



படம்:

உண்மைக் கதை: ஜலி

அண்மையில் காலம் சென்ற துரை, சென்னை போலீஸ் கமிஷனராக இருந்தபோது...










துரை அவளை அனுப்பிவிட்டு...







கண்ணே, வந்து சேர்ந்தியா... பாவி, அவன் நல்லா இருப்பானா?
பெண்ணின் தாய் அழைத்து வரப்பட்டாள்.


இத பாரும்மா, போலீஸ் அதிகாரிங்கற முறையிலே என் கடமை முடிஞ்சது... ஆனா என்னை அண்ணன்னு அழைச்சுக்கிட்டு ஆரம்பத்திலே வந்தீங்க; அதனாலே சொல்றேன்...


உங்க பொண்ணை பலவந்தப்படுத்தப் படலை! விரும்பித்தான் இவனோட போயிருக்கா. அவ மேஜர் பொண்ணு வேற. ரெண்டு பேரிடமும் தனித் தனியே பேசினேன். காதலிக்கிறாங்க!


ஐயோ! அப்ப என் கதி? நான் அனாதை ஆயிட்டேனே!
இல்லே! உங்களை வைச்சுக் காப்பாத்தத் தயார்னு இவன் சொல்றான். வேணு மதம் கூடதை மாறத்துடுறேங்க!

மறுநாள்...


ஓடிப்போன உங்க மகளுக்கு மறுபடி கல்யாணம் ஆகுமா? சுற்று வட்டாரத்தில் பேச மாட்டாங்களா?
யோசிச்சு நாளைக்குச் சொல்றோங்க!


நல்ல முடிவுக்கு வந்துட்டீங்க போல...
ஆமாங்க, ரிஜிஸ்தர் திருமணம். ஊரைக் கூட்டி ஒரு விருந்து... நீங்களும் வரணும்.
கண்டிப்பா வரேன்!

# ராஜ்கபூரின் கோரிக்கை

தமக்கு உடம்பு சரியில்லை என்று கூறி எங்கள் ஷூட்டிங்கை ஒத்திப் போடச் செய்த சரோஜாதேவி அன்றைய தினம் ஓய்வாகப் படுத்திருக்கவில்லை. தேவர் ஃபிலிம்ஸ் படப்பிடிப்பில் கலந்து கொண்டு நடித்தார்! அங்கே கால்ஷீட் கொடுப்பதற்காகத்தான் இங்கே எங்களிடம் உண்மைக்குப் புறம்பாகப் பேசியிருக்கிறார் என்பது தெரியவந்த போது, எனக்குக் கோபம் வந்தது.

''எங்களுக்குக் கொடுத்த தேதியில் இன்னொருவருக்கு நடித்துக் கொடுத்தது தவறு; உண்மைக் காரணத்தைச் சொல்லாமல் ஏமாற்றப் பார்த்தது அதை விடப் பெரிய தவறு. இதனால்தான் ஹிந்தி கல்யாணப் பரிசில் உங்களை ஹீரோயின் ஆக நான் போடப் போவதில்லை'' என்றேன்.

சரோஜாதேவிக்கு அதிர்ச்சி. அருமையான வாய்ப்பு கைநழுவிப் போனதில் வருத்தம்.

சரோஜாதேவிக்குப் பதில் வைஜயந்தி மாலாவை 'புக்' பண்ணினோம். ஹீரோ ராஜ்கபூர் என்று முன்னமேயே சொன்னேன். அவரை நிச்சயம் பண்ணு முன்னர் பல பெயர்கள் அடிபட்டன என்றும் கூறினேன். அந்தப் பெயர்களில் ஒன்று ராஜேந்திர குமார். அப்போது அவர் பிரபலமாகி வந்த நேரம். எங்கள் யூனிட்டில் சிலர் அவர் பெயரை பலமாகச் சிபாரிசு செய்ய, அவர் நடித்த படம் ஒன்றைப் பார்த்து விட்டு வந்தேன். அவர் நடிப்பில் திலீப் குமார் சாயல் ரொம்ப இருப்பதாக எனக்குப் பட்டது. அதனால் வேண்டாம் என்று ஒதுக்கினேன். (பின்னால் இதே ராஜேந்திரகுமாரை வைத்து நான் வேறு ஒரு இந்திப் படம் எடுத்தேன் என்பது வேறு விஷயம்!) இதன் பிறகுதான் ராஜ்கபூர் 'புக்' ஆனார். வைஜயந்தியும், ராஜ்கபூரும் நடித்து வெற்றிகரமாக ஓடிய கல்யாணப் பரிசின் ஹிந்தி வடிவத்துக்கு டைட்டில் : ''நஸ்ரானா''. அதன் சூப்பர் சக்ஸஸ் எனக்கு ஃபிலிம் ஃபேர் அவார்டையும் பெற்றுத் தந்தது.



சரோஜாதேவி ''நஸ்ரானா''வில் நடிக்கவில்லையே தவிர, அவருக்கு ஹிந்தி பட வாய்ப்புக் கிட்டாமல் போய் விடவில்லை. சீக்கிரமே டைரக்டர் பிரசாத் எடுத்த ''சசுராவ்'' என்ற படத்தின் மூலம் ஹிந்தியில் அறிமுகமானார்.

அதன்பின் என்னைப் பார்க்கும் போதெல்லாம், ''நீங்க ''நஸ்ரானா''வில் எனக்கு சான்ஸ் கொடுக்காட்டி என்ன? எப்படியோ ஹிந்தி சினிமாவுக்கு நானும் வந்துட்டேன் பார்த்தீங்களா?'' என்பார்.

நானும், ''ரொம்ப சந்தோஷம். நீங்க இந்த ஃபீல்டுக்கும் வரணும்கிறதுதான் என் ஆசையும். அது உங்களுக்கே தெரியும். ஆனா என் மூலமா வர முடியாதபடிக்குச் சில காரியங்கள் நடந்து விட்டன. அவை என்ன என்பதும் உங்களுக்கே தெரியும்'' என்பேன்.

இதை எதற்குச் சொல்கிறேன் என்றால், எங்களிடையே மன வேற்றுமை ஏற்பட்

**டைரக்டர் ஸ்ரீதர்**



டிருந்த போதிலும் விரோத பாவம் ஒன்றும் உருவாகி விடவில்லை என்பதைச் சுட்டிக் காட்டத்தான்.

இன்னொரு ஆச்சர்யமான விஷயமும் இதில் உண்டு. சரோஜாதேவி இந்தியில் அறிமுகமான ''சசுராவ்'' படத்தின் கதா நாயகன் யார் தெரியுமா? நான் ஹிந்தி கல்யாணப் பரிசுக்கு இவர் நடிப்பு சரிப் பட்டு வராது என்று ஒதுக்கிய அதே ராஜேந்திர குமார்தான்!

**ந**ஸ்ரானா படப்பிடிப்பின் போது, நான் ராஜ்கபூரிடம் அவ்வப்போது, ''என்ன பிரதர், என் பாணி காட்சி அமைப்பு, கேமிரா கோணம் இவையெல்லாம் உங்க ளுக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட் பேன். அவரும், ''நீங்க ரொம்ப அழகா டைரக்ட் செய்யறீங்க; எனக்கு ரொம்ப மகிழ்ச்சி'' என்பார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ராஜ்கபூர் ஒருநாள் என்னிடம் ''என்னுடைய ஆர். கே. ஸ்டு டியோ தயாரிக்கும் ஒரு படத்தை நீங்க டைரக்ட் செய்ய வேண்டும்'' என்றார். எனக்கு ஒரே ஆச்சர்யம். காரணம், ஆர். கே. ஸ்டுடியோ, ராஜ்கபூரின் சொந்தக் கம் பெனி. அதில் வெளியார் யாரும் அதுவரை படம் டைரக்ட் செய்தது இல்லை! அப்படி யிருக்க, ராஜ்கபூரே தமது கம்பெனிக்கு நான் ஒரு படம் டைரக்ட் செய்து தர வேண்டும் என்று கேட்கிறார் என்றால் அது எவ்வளவு பெரிய விஷயம்! எனக்கு ரொம்ப சந்தோஷம் ஏற்பட்டது.

ஆனால் அந்த வாய்ப்பு கைக்கு எட்டி, வாய்க்கு எட்டாமல் போன தின்பண்டம் போல் ஆகி விட்டது. காரணம், அந்தப் படத்தில் ராஜ்கபூர் நடிக்கப் போவதில்லை என்று எனக்குத் தெரியவந்ததுதான். அவர் பானரில் நான் டைரக்ட் செய்ய வேண்டும். ஆனால் அவர் நடிக்கப் போவதில்லை என்ற நிலைமை என் மனசுக்கு ஒப்புதலாய் இல்லை.

''பிரதர்! நீங்க என்னை டைரக்ட் செய் யும்படி கேட்டதே எனக்குப் பெருமை. அதுவே எனக்குப் போதும்!'' என்று கூறிக் கழன்று கொண்டேன்!

**த**மிழுக்குத் திரும்பி வந்தேன். சிவாஜி யின் குடும்ப நண்பர் முத்துமாணிக்கம், ஒரு படத்துக்குக் கதை-வசனம் மட்டும் என்னை எழுதித் தரச் சொல்லிக் கேட்க, நானும் ''விடிவெள்ளி'' என்ற தலைப்பில் எழுதி னேன். சிவாஜியிடம் கதையைச் சொன்ன தும் அவருக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. அவர் பாராட்டிப் பேச, விளைவு என்னவென்றால் என்னையே டைரக்ட் செய்யும்படி சொல்லி விட் டார்கள்!

இதே நேரத்தில், வீனஸ் பிக்சர்ஸிலும் ''அடுத்து என்ன படம் பண்ணுவது?'' என்ற கேள்வி எழுந்தது. விவாதங்களின் இடையில், பார்ட்னர் கிருஷ்ணமூர்த்தி, ''வெளி கம்பெனிகளுக்கும் ஸ்ரீதர் படம் பண்ணுவதாகத் தெரிகிறதே?'' என்றார்.

''நான் வீனஸுக்கும் படம் பண்ணு கிறேன், வெளி கம்பெனிகளுக்கும் பண்ணு கிறேன்'' என்றேன்.

''இல்லை, இல்லை! வீனஸுக்கு மட்டும்தான் நீ படம் பண்ண வேண்டும்!'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

இலேசான அபிப்பிராய பேதம் உரு வாகி விட்டது. இது எதில் போய், எப்படி முடிந்தது என்பதை அடுத்த இதழில் சொல்கிறேன்!

''ஏம்பா! ஏறும் போது பத்து ரூபாய் வாடகை பேசிட்டு விடு வந்தப்புறம் பதினைஞ்சு ரூபாய்தான் வேணும்னு அடம் பிடிக்கிறது என்ன நியாயம்?''

''ஏறும் போது உங்க விடு இவ்வளவு பெரிசா இருக்கும்னு நினைக்கலிங்க...!''

- பெ. கலாசாமி



ஸிக்ஸர் : | பொன்விழா ஆண்டு :: தங்க நகை பரிசு - 8

# மறக்க முடியாத அப்துல்காதர்; மன்னிக்க முடியாத சேதன்சர்மா!

இந்தியாவும், பாகிஸ்தானும் முதல் ஷார்ஜா கோப்பைக்கு மோதும் கடைசி ஆட்டம். கடைசி ஓவரில், கடைசி பந்து. பாகிஸ்தானுக்குத் தேவை ஆறு ரன்கள். அவர் அவுட் ஆனாலும் சரி அல்லது நான்கு ரன்கள் எடுத்தாலும் சரி நமக்கு வெற்றி உறுதியான கட்டம். டீ. வி. யில் பார்க்கும் நமக்கு திக்...திக்...திக். இந்தியாவின் மானம் பந்து வீசும் சேதன் சர்மா கையில் இருந்தாலும் எனக்கு முழு நம்பிக்கை இருந்தது. ஏன் என்றால் எதிர் அணியில் விளையாடும் அப்துல் காதர், சிறந்த பேட்ஸ்மேன் அல்ல. அவர் சிறந்த சுழல் பந்து வீச்சாளர், ஆதலால் ஒரு நம்பிக்கை ஆறு ரன்கள் எடுக்க வாய்ப்பு இல்லை என்று. ஒரு ரன் கூட விட முடியாது என்ற நோக்கத்தில் நமது ஆட்டக்காரர்கள் மைதா னத்தில் பரவி இருக்க, அந்தக் கடைசிப் பந்தை சர்மா எடுத்து ஓடி வருகிறார். என் இதயமும் அவரோடு ஓடுகிறது. அப்துல் காதர் இரண்டில் ஒன்றைப் பார்த்து விடத் துடிக்கிறார். சர்மாவோ, இந்தா உங்களுக்கு ஆறு ரன்கள் தானே வேண்டும் அடித்து கொள்ளுங்கள் என்று அழகாக அவருக்குப் பந்தைக் கொடுக்க, அப்துல் காதர் மிகவும் தைரியமாக ஒரு விரோதியை ஓங்கி அடிப் பது போலப் பந்தை மேல் நோக்கி அடிக்க, அது நான்கு ரன்கள் இருக்கும் என்று நான் (அனைவரும்) நினைக்க, அது அரங்கத்தின் கூரையின் மேல் விழுந்து ஆறு ரன்களாய் மாற...ம்.. இந்தியாவின் தோல்வியையும், பாகிஸ்தானின் வெற்றியையும் உறுதி செய்த அந்த ஸிக்ஸர்... வாவ்... இன்னும் என்னால் மறக்க முடியாத ஆட்டமாய் மனத்தில் நிற்கிறது. அதனால்தான் சொல்கிறேன் மறக்க முடியாதவர் அப்துல்காதர், மன்னிக்க முடியாதவர் சேதன் சர்மா!

- கோலார் தங்க வயல், ஸ்டீபன்சன்.



பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகை பரிசு பெறுபவர் :

எம். ஸ்டீபென்ஸன்,<br>
B 355 – 08633<br>
ரூல்ரூம் BEML<br>
கோலார் தங்க வயல் - 563115.

## மன்னரின் பெருந்தன்மை

1950ம் ஆண்டில் புதுக்கோட்டையில் மன்னர் கல்லூரியில் படித்துக் கொண்டி ருந்த போது, சென்னை நகரக் குழுவிற்கும் மாவட்டங்களின் குழுவிற்குமான கிரிக் கெட் போட்டி புதுக்கோட்டையில் கல்லூரி மைதானத்தில் நடந்தது. மாவட்டக் குழு விற்குப் புதுக்கோட்டை மன்னர் ராஜ கோபாலத் தொண்டைமான் தலைமை வகித்தார். ஒவ்வொரு ஆட்டத்திற்கும் புத்தம் புதிய பாட் எடுத்துச் செல்லுவது அவரது வழக்கம். முதல் பந்தைக் கண்ணா யிரம் வீசினார். மன்னரின் காலில் பந்து பட்டு எல். பி. டபிள்யூ அவுட் கொடுக் கப்பட்டது. மன்னர் பெவிலியனுக்குத் திரும்பி விட்டார்.

மைதானத்தில் நிசப்தம். பெவிலியனில் பலத்த சர்ச்சை. பந்து பாட்டின் மீது பட்டுக் காலில் பட்டது; தவறாக அவுட் கொடுக் கப்பட்டது என்றனர் சிலர். வேறு சிலர் அவுட் கொடுத்தது சரியே என்றனர்.

மன்னரின் ஆசிரியரும் சிறந்த அம்பயரு மான பி. ஆர். சுப்ரமணியம் 'அவுட் கொடுத்தது சரியா?' என்று கேட்டார். வாயைத் திறந்து பதில் கூறாத மன்னர், தமது புதிய மட்டையைத் தூக்கிக் காண்பித் தார். மட்டையின் நடுப்புற ஓரத்தில் புதிய பந்தின் சிவப்பு நிறம் தெளிவாகத் தெரிந் தது. தவறாக எல். பி. டபிள்யூ அவுட் கொடுக்கப்பட்டு விட்டதைக் கொஞ்சமும் பாதிப்பு இல்லாமல் மன்னர் ராஜ கோபாலத் தொண்டைமான் பெருந்தன் மையுடன் ஏற்றுக் கொண்டது இன்னும் என் நினைவில் பசுமையாக இருக்கிறது!

- புதுதில்லி - 22, பி. கிருஷ்ணமூர்த்தி.

## தோல்வி வெற்றியானது!



"ஷார்ஜா ஒருநாள் சர்வதேச கிரிக்கெட் போட்டியில் கபில்தேவ் 200 விக்கெட்டுகள் பெற்றுச் சாதனை புரிந்த இந்த நேரத்தில், அவர் 5 நாள் சர்வதேசப் போட்டியில் 200 ஆவது விக்கெட் பெற்ற போது நடந்த சுவையான சம்பவம் நினைவுகூரப்பட்டது.

வெஸ்ட் இண்டீஸில், போர்ட் ஆஃப் ஸ்பெயினில் (1983) நடந்த 2 ஆவது டெஸ்டில், கவாஸ்கர் ரசிகர் ஒருவர், கிரீனிட்ஜ், ஹெயின்ஸ், ரிச்சர்ட்ஸ் ஆகிய மூவரும் சேர்ந்து எடுக்கும் ரன்களை விட கவாஸ்கர் அதிக ரன்கள் எடுப்பார் என்று 200 டாலர்கள் பந்தயம் கட்டினார். முதலில் ஆடிய கவாஸ்கர் ஒரு ரன் எடுத்து அவுட்டானார். அந்த 1 ரன்னை மற்ற மூவரும் எடுத்து விடுவார்கள் என்று எண்ணி 200 டாலர்களைக் கொடுத்துத் தோல்வியை ஒப்புக் கொண்டு விட்டார். ஆனால் கிரீனிட்ஜும், ஹெயின்ஸும் சந்துவிடம் டக்கில் அவுட்டானார்கள். ரிச்சர்ட்ஸ் ஒரு ரன் எடுத்து கபில்தேவிடம் அவுட்டானார். கவாஸ்கரின் ரசிகர் பந்தயம் கட்டிய நபரைத் தேடி நொந்து போனார்!

- கல்பாக்கம், எஸ். சாரங்கராஜன்.

## "புரியும்படி சொல்லு!"

பள்ளியில் மேட்ச் விளையாடும் போது, இரண்டு டீம் ஆட்டக்காரர்களும் பெவிலியனில் உட்கார்ந்திருந்தோம். எங்கள் அணி பாட்டிங் செய்து கொண்டிருந்தது. மிக மோசமான நிலை. அப்போது தான் வந்த எங்கள் கட்சி அனுதாபி 'என்ன ஸ்கோர்' என்று கேட்க, நான் '6 for 4' என்றேன். உடனே அடுத்த அணி ஆள் 'அப்படிச் சொன்னால் புரியாது. எது ரன் எது விக்கெட் என்று சொல்லுங்க' என்றார். எங்கள் டென்ஷனையும் மறந்து எல்லோரும் சிரித்தோம்.

- மயிலாடுதுறை,
ஆர். பாலசுப்பிரமணியன்.

## கபில் கபில்தான்!

சென்ற வருடம் இந்தியக் கிரிக்கெட் அணி இங்கிலாந்தில் சுற்றுப்பயணம் செய்த பொழுது 'லார்ட்ஸ்' மைதானத்தில் நடந்த முதல் டெஸ்ட்டில் 454 ரன்கள் எடுத்தால் 'ஃபாலோ ஆனை'த் தவிர்க்கலாம் என்ற நிலையில் இந்தியா தன்னுடைய ஒன்பதாவது விக்கெட்டை 430 ரன்கள் எடுத்து இழந்தது. அச் சமயம் 53 ரன்களோடு ஆடிக் கொண்டிருந்த கபில் தேவோடு ஆட வந்தார் கடைசி ஆட்டக்காரரான ஹிர்வானி. 'ஹெமிங்ஸின்' அடுத்த ஓவரில் முதல் இரண்டு பந்துகளைத் தடுத்து ஆடிய கபில்தேவ் அடுத்து வந்த மூன்று பந்துகளிலும் மூன்று ஸிக்ஸர்கள் அடித்தார். இந்தப் போட்டியின் வர்ணனையை BBC ரேடியோவில் கேட்டுக் கொண்டிருந்தேன் நான். அப்பொழுது வர்ணனை செய்து கொண்டிருந்தவர், சிறப்பு வர்ணனையாளரும் இங்கிலாந்தின் தலைசிறந்த ஆட்டக்காரருள் ஒருவரான வரும் ஆன 'டிரவர் பெய்லி'யிடம் கபில்தேவ் கடைசிப் பந்தில் ஒரு ரன் எடுப்பாரா அல்லது ஸிக்ஸர் அடிப்பாரா என்று கேட்டதற்கு 'கபில் கபில்தான். ஸிக்ஸர் தான் அடிப்பார்' என்று கூறினார். ஒரு இந்திய வீரரைப் பற்றி ஒரு இங்கிலாந்து ஆட்டக்காரர் புகழ்ந்து கூறுவதைக் கேட்டு நெகிழ்ந்து போனேன் நான். அவர் கூறியது போலவே தொடர்ந்து நான்காவது பந்திலும் ஸிக்ஸர் அடித்து உலக சாதனை புரிந்ததோடு ஃபாலோ ஆனையும் தவிர்க்க வைத்தார் கபில்தேவ். அடுத்த ஓவரின் முதல் பந்திலேயே ஹிர்வானி அவுட் ஆனார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

- சென்னை - 64, என். சூர்யா பிரகாஷ்





பாலு ஜுவல்லர்ஸ்

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

### கல்கி, டிசம்பர் 16, 1941

### உயர்ந்து போச்சு!

தலையைச் சுற்றி மூக்கைத் தொடுவதில் என்ன உபயோகம்? முக்கியமான செய்தியை உடனே சொல்லி விடுகிறோம். வரும் ஜனவரி 1ᵘ இதழிலிருந்து ''கல்கி'' தனிப் பிரதியின் விலையிலும் சந்தா விகிதத்திலும் சிறிதளவு கூடுதல் செய்யப்படும். தனிப் பிரதி விலையில் அரையணா கூடுதல்; அதாவது ஒரு பிரதியின் விலை இரண்டரை அணா. வருஷ சந்தாவில் எட்டணா கூட்டி, ரூ. 3-8-0 ஆக்கப்படுகிறது.

- என்ன சேதி

### மார்பில் பாய்ந்தது!

வளர்த்த கடா மார்பில் பாய்வது போலவும், நீட்டிய மரத்தில் கூர் பார்ப்பது போலவும், கற்ற வித்தையைக் குருவிடமே காட்டிய சிஷ்யனைப் போலவும், வரங் கொடுத்த சிவன் தலையிலேயே கை வைக்கப் போன பஸ்மாசுரனைப் போலவும், குள்ள ஜப்பான் தேசமானது அமெரிக்காவின் மீதும் பிரிட்டன் மீதும் திடீரென்று பாய்ந்து விட்டது. பாய்ச்சல் என்றால் அற்ப சொற்பமான பாய்ச்சல் அன்று; சிங்கப்பூரிலிருந்து ஸான் பிரான்ஸிஸ்கோ வரையில் பரவிய அகண்டமான 10,000 மைல் பாய்ச்சல்! அமெரிக்காவுக்கு 2402 மைலுக்கு இப்பாலுள்ள ஹோனோலுலுவையும், அதற்கு 4500 மைலுக்கு இப்பாலுள்ள குவம் தீவையும், அதற்கு 1700 மைலில் பிலிப்பைன் தீவையும், இன்னும் 1500 மைலுக்கு இப்பால் சிங்கப்பூரையும் ஏககாலத்தில் கொடிய குறிதவறாத ஆகாய விமானக் குண்டுகளைக் கொண்டு தாக்கிற்று; தாக்கிப் படுசேதம் விளைவித்தது.

ஜாப்பானுடைய ஆரம்ப வெற்றிகளைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஆரம்ப சூரத்தனம் எப்போதுமே முடிவில் வெற்றி தருவதில்லை என்பதை நாம் பார்த்திருக்கிறோம். எந்த யுத்தத்திலும் நின்று சண்டை போடக் கூடியவன்தான் வெற்றியடைவான். அத்தகைய சக்தி பிரிட்டனுக்கும், அமெரிக்காவுக்கும் இருக்கிறது.

- தலையங்கத்தின் ஒரு பகுதி

### பாக்கியசாலி

''தகப்பனார் தாய் நாட்டின் விடுதலைக்காகச் சிறையில் இருந்தார்; தாயாரும் சிறையில் இருந்தார்; அருமை அண்ணன் பல முறை சிறை புகுந்தார்; அண்ணியும் அவரைத்தொடர்ந்து சிறை வாசம் செய்தார்; புருஷன் சுதந்திரப் போரில் சிறைப்பட்டார்; தாமும் சிறை வாச சுகத்தை அநுபவித்தார்'' என்று ஒருவரைப் பற்றிச் சொல்லக் கூடுமென்றால், அவருடைய பாக்கியத்தை என்னவென்று சொல்வது? ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் அத்தகைய பாக்கியசாலி. அவர், பண்டித மோதிலால் நேருவின் செல்வக் குமாரி; பண்டித ஜவாஹர்லாலின் அருமைச் சகோதரி. தேச சேவையில் அவர் சிறைவாசம் செய்ததோடு நிற்கவில்லை; மந்திரியாக வேலை பார்க்கவும் முன் வந்தார். ஒப்புக் கொண்ட வேலையைத் திறமையுடன் வகித்தார். ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி அடுத்த ஜனவரி மீ முதல் வாரத்தில் சென்னைக்கு வருவாரென்றும், நாலாவது சர்க்கிள் காங்கிரஸ் மகாநாட்டைத் திறந்து வைப்பாரென்றும் அறிந்து மகிழ்கிறோம். தமிழ் மக்களின் சார்பாக அவருக்கு வரவேற்புக் கூறுகிறோம்.




- அட்டைப்பட விளக்கம்

### ஆகாச வெடி!



''நெஞ்சில் ஈரமில்லாத சில விறகு வியாபாரிகள் விலையை அளவுக்கு மீறி உயர்த்தி விட்டனர்.''

- தினசரியில் ஒருவர்

''விறகு வியாபாரிகளின் நெஞ்சில் இருந்த ஈரமெல்லாம் அவர்கள் விற்கும் விறகில் இறங்கியிருக்க வேண்டும்'' என்பது ஒரு அபிப்பிராயம்.

### அரியக்குடி எதிர்க்கிறாரா?

ஸ்ரீ ராமானுஜய்யங்கார் சமீபத்தில் தமிழ்ப் பாட்டுப் பாடுவதின் சம்பந்தமாகத் தமது கருத்தை வெளியிட்டிருக்கிறார். சங்கீதக் கச்சேரிகளில் பாடும் உருப்படிகளில் பாதி தமிழ்ப் பாட்டாய்ப் பாடுவதற்கு அய்யங்கார் தமது சம்மதத்தைத் தெரிவித்திருக்கிறார். அதாவது, இவ்விதம் பத்திரி



கைகளில் வெளியாகி யிருக்கிறது. இது உண்மையானால், தமிழிசை இயக்கத்தை ஐயங்கார் எதிர்க்கிறார் என்பதாக நாம் சொல்வதற்கு இல்லை. அந்த இயக்கத்துக்குப் பெரும் ஆதரவு கொடுக்கிறார் என்றே சொல்ல வேண்டும்.

இன்னும் பார்க்கப் போனால், தமிழிசை இயக்கத்துக்கு இது ஒரு சிறந்த வெற்றியென்றே நான் சொல்லத் தயாராயிருக்கிறேன்.

நேற்று வரை, எத்தனையோ சங்கீதக் கச்சேரிகளை அய்யங்கார் ஒரு தமிழ்ப் பாட்டுக் கூடப் பாடாமல் முடித்திருக்கிறார்; நான் கேட்டிருக்கிறேன்.

- ஆடல் பாடல் - கர்நாடகம்

## அதுவும் சரிதான்!

**வீட்டுக்காரர்** : இதென்ன, ஐயா, உங்களுடைய தொல்லையே தொல்லையாய்ப் போச்சு! இனிமேல் 'இன்ஷ்யூரென்ஸ் ஏஜெண்டுகள் வரக் கூடாது' என்று போர்டு போட்டு விட வேண்டியது தான்!



இன்ஷ்யூரென்ஸ் ஏஜெண்ட் (குஷியுடன்) : அது தான் சரி; தாராளமாய்ப் போடுங்கள். இவ்வூரிலுள்ள போர்டு போடும் கம்பெனிக்கும் நான்தான் ஏஜெண்டு. எந்த ஸைஸ், எந்த ரக போர்டு உங்களுக்குத் தேவை?

- ராமு

## பரீட்சை முடிவு!



## யார் அந்த எஸ். ராஜம்?

**'பார்த்திபன் கனவு'** பக்ஷத்திற்கொரு முறை தெவிட்டாத தெள்ளமுதாக இருக்கிறது. அதில் வரும் படங்கள் மிகக் கவர்ச்சியுள்ளதாக இருப்பது வெகு ஆனந்தம். 'ஹிந்து' பத்திரிகையில் வந்த 'பார்த்திபன் கனவு' விளம்பரத்திலும், 16-11-41 'கல்கி'யில் 39-ம் பக்கத்திலும் படங்கள் எழுதின ஸ்ரீ. எஸ். ராஜம் யார்? வங்காள ஓவியக் கலையைப் பின்பற்றி இவர் ஓவியங்கள் சித்திரித்திருப்பது வெகு அழகாக இருக்கிறது.



- வை. கல்யாணசுந்தர சர்மா

(ஸ்ரீ எஸ். ராஜம் என்பவர், ''சீதா கல்யாண'த்தில் ராமராக நடித்த டாக்கி நட்சத்திரம். அவர் வங்காள ஓவியக்கலையைப் பின்பற்றி எழுதவில்லை; புராதன இந்திய சித்திரக் கலையைப் பின் பற்றி எழுதுகிறார். இந்தச் சித்திரக்கலை பழந்தமிழ் நாட்டுக்கும் உரியதுதான். - ஆசிரியர்.)

- வட்டமேஜை

## ''சபாபதி''யில் - சாரங்கபாணி

● சபாபதி டாக்கியில் ஸ்ரீ கே. சாரங்கபாணி ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதராக நடிக்கிறாரென்றறிந்து யாம் கழி பேருவகை எய்தினம். வெண்டிரைட் டண்டமிழ்ப் படத்தின் கண் இற்றை வரை நகைச்சுவை நடிப்பிற் பல் வேடம் புனைந்து மக்களைக் களிப் பூட்டுவார் சிலரே யாம்; மிகச் சிலரே யெனினும் பிழை படா. இன்னவர்களின்று இயல்போடொட்டியக்கனி நடிப்பிற் றம்மோடொப்பாரற்ற திறன் வாய்ந்த திரு சாரங்கபாணி என்பார், இச் 'சபாபதி' வெண்டிரைப் படத்தினிற் றோன்றித் தண்டமிழ்ப் பண்டிதராய் நடிக்கிறாரெனுஞ் செய்தி கேட்டு உவகை யெய்தாத மாந்தரும் உளராங்கொல்! 'சபாபதி'யின் கண், சாரங்க பாணியின் ஆசிய நடிப்பினைக் கண்ணுற்றவன்பர்களொரு கருத்தினராய்ப் புகழ்த லிவண் நோக்கிற் பிற கூறுதலெற்றுக்கு?



- சினிமா செய்தி

# "ரஜினி முதல்வராகக்கூடாதா?"

◆ ரஜினி நடித்த ''தளபதி'' தமிழகமெங்கும் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கும் வேளையில் திருச்சியிலுள்ள அவரது ரசிகர் மன்றத்தினர் ''நேற்று கலைஞர்; இன்று ஜெயலலிதா; நாளை ரஜினி - தமிழக முதல்வர்'' என்று போஸ்டர் ஒட்டினர். இது ஜெயலலிதாவுக்குக் கோபத்தைக் கிளறவே போலீசார் மூலம் நகரெங்கும் ஒட்டப்பட்ட போஸ்டர்களைக் கிழித்து அதை ஒட்டிய ரசிகர் மன்றத்தினரையும் கைது செய்திருக்கிறார். சினிமாவிலிருந்து வந்த ஜெ. முதல்வராகும் போது, ரஜினி முதல்வராகக் கூடாதா? எதுவும் மக்கள் கையில் உள்ளதே தவிர ஜெ. கையில் இல்லை.

சிதம்பரம், எஸ்.ஆர். பாஸ்கரன்.

◆ சூப்பர் அலசல் என்ற பெயரில் ஜால்ரா போட்டு இருக்குமோ 'கல்கி' என்ற சந்தேகத்துடனே படிக்க ஆரம்பித்த எனக்கு, என் கணிப்பு தவறு என்று உடனே புரிந்து விட்டது. நிறை குறைகளை அலசி, மடக்கி மடக்கிக் குறுக்குக் கேள்விகளைத் தொகுத்துள்ள விதம் மிக அருமை.

கோவை சிவானந்தபுரம், கே.ஆர். விஜயா.

◆ தமிழ்ப் படங்களில் அதிகரித்து வரும் வன்முறைகளை - குறிப்பாக தளபதி படத்தில் - தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் இடையில் நடைபெறும் போராட்டம் என சப்பைக் கட்டுக் கட்டியுள்ளார்கள். வன்முறைக்கு விடிவு, வன்முறையல்ல என்பதை மகாத்மா காந்தி பிறந்த இம்மண்ணில் போதிக்க வேண்டியதுதான் சினிமா போன்ற மாபெரும் தகவல் சாதனத்தின் கடமை. இந்த வன்முறைகள் நம் இளைய சமுதாயத்தை எந்த வகையில் பாதிக்கும் என்பதைச் சிந்திக்க வேண்டும்.

பூந்தமல்லி, டாக்டர் ரெ. தெய்வச்சிலை.

◆ 'போர்ப்படைத் தளபதியாய், எதிரிகளைக் கொன்று குவிக்கிற வீரனாய், அநீதியைத் தட்டிக் கேட்கிற தைரியசாலியாய்த் தன் காதலன் இருப்பதையே காதலியின் உள் மனம் விரும்புகிறது!' என்பதைத்தான் விஷுவலாய் ரசிகர்களுக்கு உணர்த்த விரும்பி, வித்தியாசமான அந்தப்பாடல் காட்சியை டைரக்டர் அமைத்திருக்கிறார். பாடல் வரிகள் கூட அதையேதான் உணர்த்துகின்றன. இதில் புரியாமல் போக என்ன இருக்கிறது!

பட்டுக்கோட்டை, பட்டுக்கோட்டை ராஜா.

◆ பாக்யராஜ் ஏற்கெனவே ''பொய்சாட்சியில்'' சுமித்ராவின் இளவயது காரெக்டருக்கு வேறு பெண்ணைப் பயன்படுத்தி இருக்கிறார், தளபதி பட அலசலில், டைரக்டர் எஸ்.பி. முத்துராமன் 'இதுவரை யாருமே அப்படிச் செய்ததில்லை' எனக் கூறியிருப்பது தவறு.

மதுரை, ஜி. ராம்குமார்.

◆ அலமு அம்முவுக்கு எழுதிய கடிதம் பார்த்தேன். அதில் திருமதி 'லஷ்மி'யின் கதையான 'அவளுக்கென்று ஒரு மனம்' டி.வி தொடரைப் பற்றிய விமர்சனம் எனக்கு ஒப்புதல் இல்லை. அதில்வரும் கதாநாயகியைப் போல் நம் நாட்டில் ஏராளமான பெண்கள் இருந்திருக்கிறார்கள்; இன்னமும் இருந்து கொண்டிருக்கிறார்கள். நியாக மனப்பான்மையுடன் ஒரு பெண் இருந்தால்தான் அவள் குடும்பத்தினரை அனுசரித்துச் செல்ல இயலும். நல்ல முறையில் தன் குழந்தைகளை வளர்க்க முடியும்.

அண்ணாநகர், ஜெயலஷ்மி.

◆ 'அவளுக்கென்று ஓர் இடம்'' டி.வி. சீரியல் பற்றிய எங்களின் எண்ணங்களை அப்படியே பிரதிபலித்தது, அம்முவிற்கு எழுதப்பட்ட அலமுவின் கடிதம்.

காட்டூர், எஸ். அருள்மொழி.

◆ குணா படத்தில் உங்களுக்கு என்ன குழப்பம்? இதைவிடத் தெளிவாக உங்களுக்கு என்ன விளக்க வேண்டும். ஒரு விஷயத்தைத் தமிழில் ஆழமாகச் சொன்னால் உடனே அவார்டு Film என்பதா? ஒவ்வொரு Frame ஆக அனுபவிக்க வேண்டிய, அலசவேண்டிய படம் ''குணா''. ஒவ்வொரு படத்திலும் வித்தியாசமாகச் சாதிக்க வேண்டும் என்று செயலாற்றி வரும் நடிகர், தமிழ் நாட்டில் கமல் மட்டுமே.

துறையூர், கார்த்திகேயன்.

◆ ''தி. மு. க. கௌபாய் அரசியல்'' கட்டுரை தருந்த சமயத்தில் வெளியான அலசல். 'கல்கி'க்கு எனது மனமார்ந்த பாராட்டுதல்கள். ஆனால் கலைஞர்தம்முடைய எம். எல். ஏ. பதவியை ராஜினாமா செய்யாமல் சட்ட சபைக்குச் சென்று பணியாற்றியிருக்க வேண்டும் என்ற கருத்து மட்டும் ஏற்க இயலாதது. சட்டசபைத் தேர்தல் முடிந்த போது தி. மு. க. சார்பில் வெற்றி பெற்ற ஒரே எம்.எல்.ஏ. கலைஞர்தான். சட்டசபைக்குச் சென்றிருந்தால் நிச்சயமாக அவமானப்படுத்தப்பட்டிருப்பார். கலைஞர் அதைத் தவிர்த்தது வரவேற்கத் தக்கது. சட்டசபையிலேயே முதல்வர் காலில் விழுந்து வணங்குகின்ற சபாநாயகர் உள்ள சட்ட மன்றம் அல்லவா நமது சட்டமன்றம்?

அந்தியூர், மு. தவசியப்பன்.

◆ மக்கள் நம்மைத் தோல்வி அடையச் செய்து விட்டனர் என்பதற்காக; ஆளும் கட்சி செய்வது எதையும் தட்டிக் கேளாமல், மக்கள் மேல் கோபம் கொண்டிருந்தால் கட்சி வளராது; மக்களின் குறைகளைத் தீர்த்து வைக்க முன் வந்து செயல் பட்டால்தான் மக்களுக்கு நம்பிக்கை உண்டாகும் என்பதை அட்டைப் படத்தில் கலைஞர் கருணாநிதியைப் போட்டு விட்டு, ஒரு தாய் தன் குழந்தைக்கு அறிவுரை வழங்குவது போல் தெரிவித்து விட்டீர்கள்.

சென்னசமுத்திரம், எம்.ஆர். அர்ஜுன் சங்கரன்.

◆ ''புலிகளை இங்கு ஊன்றவைத்ததும், வளர்த்ததும் அ. தி. மு. க., காங்கிரஸ். தி. மு. க. இரண்டாவது தடவையாகப் பதவியேற்ற சமயத்தில் ஓராண்டு மத்தியில் இருந்ததும் ராஜீவ். ராஜீவ் கொலையை ஒட்டித்தான் விடுதலைப்புலிகள் விஷயத்தில் மத்திய-மாநில அரசுகள் தீவிரம் காட்டின. தி. மு. க. வும் குற்றவாளிதான் என்றாலும் பெரிய குற்றவாளிகள் காங்கிரசும், அ. தி. மு. க. வும்தான்.

கோவை, எஸ்.ஜி. ராஜன்.

வட்டமேஜை

## நீங்கள் கேட்டவை - தராசு

● பாலையா, கோவை.

**? பஸ் கட்டண உயர்வு அதிகம் என்று ஒப்புக் கொள்கிறீர்கள். ஆனால் போராட்ட முறை சரியில்லை என்கிறீர்கள் (24.11.91 வட்டமேஜை - ஆசிரியர் குறிப்பு) நீங்களே ஒரு வழி சொல்லுங்களேன்?**

! போராட்டம் என்று கூறி பஸ்களை நொறுக்குவதால், அல்லது எரிப்பதால் யாருக்கு நஷ்டம்? நமக்குத்தான். சாலை மறியல் போராட்டம் நடத்தினால் யாருக்குக் கஷ்டம்? மக்களுக்குத்தான். அரசு கீழிறங்கி வந்ததா? இல்லையே? எனவே எதிர்க்கட்சிகள் ஆக்கபூர்வமாகச் சிந்திக்க வேண்டும். இன்னின்னது செய்தால் செலவினங்களைக் குறைக்கலாம். அதனால் கட்டண உயர்வையும் இந்த அளவுக்குக் குறைக்கலாம் என்று திட்டம் வகுத்துத் தர வேண்டும். இவர்களும் ஆட்சியில் இருந்தவர்கள்தானே? ஏன் யோசனை சொல்லக் கூடாது? அதை அரசு கேட்காமல் போனால் மக்களுக்காவது உண்மை நிலவரம் புரியும் அல்லவா? தங்களின் நலனில் அக்கறை கொண்டவர் யார் என்று உணர்ந்து அடுத்த தேர்தலின் போதாவது செயல்படுவார்கள் அல்லவா? சத்துள்ள ஜனநாயகம் சட்ட சபையில், மேடையில், பத்திரிகைகளில் செயல்பட வேண்டும். சாலையில் அல்ல.

● டி. சீனிவாசன், சென்னை.

**? இடைத் தேர்தல் முடிவுகளில் அநேகம், காங்கிரஸுக்குச் சாதகமாகக் கிடைத்திருப்பது எதைக் காட்டுகிறது?**

! மத்தியில் மைனாரிடி ஆட்சி அமைவதை மக்கள் விரும்பவில்லை; ஆட்சி கவிழ்ந்து மறுபடி தேர்தல் வருவதை வரவேற்கவில்லை; எனவே மத்திய அரசைப் பலப்படுத்த நினைக்கின்றனர் என்பதை.

● வ. தே. பாலசுப்பிரமணியன், சென்னை.

**? டாக்டர்களின் வேலை நிறுத்தம்?**

! சிற்சில துறைகளில் வேலை நிறுத்தமே கூடாது; எவ்வளவு சிரமமானாலும் வேறு விதங்களில்தான் கோரிக்கைகளை எடுத்து வைத்துப் பரிகாரம் காண முற்பட வேண்டும் என்பது என் உறுதியான கருத்து. அதில் மருத்துவத் துறையும் ஒன்று.

● கே. வேல்சாமி, மதுரை.

**? ஜனரஞ்சகப் பத்திரிகையில் இலக்கியம் பண்ண முடியாது என்கிறாரே, சுஜாதா?**

! அவரே அதைப் பொய்யாக்கிக் காட்டியிருக்கிறாரே!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

**? ஜெயலலிதாவின் புகழ் பரப்ப நாளிதழ் விளம்பரங்களுக்குச் செலவிடும் தொகையைத் தவிர்த்து, ஜெயலலிதாவின் இன்றைய சாதனைகள் என தொலைக் காட்சியில் ஒரு**



டி.வி. தொடர்!

### 'ஜெ' புகழ் பரப்ப டி.வி. தொடர் ஒளிபரப்பலாமா?

**தொடர் நிகழ்ச்சியை ஒளிபரப்பினால் என்ன?**

! இப்போது அது நடக்காமலா இருக்கிறது!

● அ. இராஜப்பன், கருமத்தம்பட்டி.

**? கல்வியாளர் அவினாசிலிங்கம் மறைவு...?**

! சுதந்திரப் போராட்டத் தியாகி. காந்திஜி பொதுத் தொண்டு ஆற்றுமாறு கூறியதைச் சிரமேற் கொண்டு இரு ஹரிஜனச் சிறுவர்களுடன் பள்ளி தொடங்க, அது இன்று, ஆல் போல் வளர்ந்து, கோவையில் ராமகிருஷ்ணா மிஷன் வித்யாலயம், அவினாசிலிங்கம் ஹோம் ஸயன்ஸ் கல்லூரி என்றெல்லாம் அவர் புகழ் பரப்புகின்றன. சென்னை மாகாணக் கல்வி மந்திரியாக இருந்த போது ''கல்கி'' அவர்களின் யோசனையை உடனே ஏற்று தமிழில் கலைக்களஞ்சியம் (என்ஸைக்ளோபீடியா) உருவாக வழிவகுத்தார். அசைக்க முடியாதபடி தமது பெயரை நிலைநிறுத்திச் சென்றுள்ளார், 'அய்யா'.

● ஆர். ஜெயராமன், நரசிங்கபுரம்.

**? ஆயாராம்; கயாராம் தலையங்கத்தின் இறுதியில் கட்சி மாறுவோரை மக்கள் மன்றத்துக்குப் போகச் சொல்கிறீர்கள். -**



ஜனரஞ்சக இலக்கியம்!



கல்விக்கு ஓர் 'அய்யா'



☛ நண்பரின்...



☛ ... விமர்சனம்!

விளக்கம் தேவை.

! பல ஜனநாயக நாடுகளில் Right to recall என்ற முறை அமலில் உள்ளது. தாங்கள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள் சரியாக நடந்து கொள்ளவில்லை என்று மக்கள் கருதினால் அவர்களை பதவிக் காலம் முடியு முன்பே ''திரும்ப அழைத்து'' விட்டு, வேறு ஒருவரைத் தேர்ந்தெடுக்க லாம். எனவே கட்சி மாறுவோரும் தொகு திக்குத் திரும்பச் சென்று மக்கள் ஒப்புதல் பெற்று வர வேண்டும் என்று ஏற்படுத்து வது காரிய சாத்தியமே. இவ்வாறு செய் தால் தக்க காரணம் இன்றிப் பணத்துக்காகக் கட்சி மாற எம்.பிக்கள், எம். எல். ஏக்கள் பயப்படுவார்கள். தக்க காரணத்துக்கான, நியாயமான கட்சி மாற்றம் எனில் மக்கள் ஒப்புதல் அளித்து விடுவார்கள். இதற்கெல் லாம் வழி முறைகளையும் விதி முறை களையும் வகுக்க வேண்டும். மனமிருந் தால் மார்க்கம் உண்டு.

● அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.

? தொலைக் காட்சியில் பாராளுமன்ற நடவடிக்கைகளை ஒளிபரப்பப் போகிறார் களாமே?

! சென்ஸார் செய்துதான் என்பது தீர்மான மாகி விட்ட நிலையில் அதன் பயன் அற்ப சொற்பமாகத்தான் இருக்கும்.

● மா. பழனிச்சாமி, கோவை. ❑

? ராஜீவ் காந்தி கொலை வழக்கில் சி. பி. ஐ. குழப்பமான நிலையில் இருக் கிறதா? தெளிவான சிந்தனையுடனா?

! தடா சட்டம் தடாலடியாகப் பிரயோகிக் கப்பட, நாளைக்கு ஒரு புள்ளி பிடிபட்டு உள்ளே தள்ளப்படுகிறார். இவர்களுக்கெல் லாம் ராஜீவ் காந்தி கொலையில் தொடர்பு உள்ளதா என்று பார்ப்பதற்குப் பதில், விடுதலைப்புலிகளிடம் அனுதாபம் காட் டிய, காட்டுகிற அனைவருமே தேசத் துரோ கிகள் என்று கருதப்படுவதாகத் தெரிகிறது. இது சரியான அணுகுமுறை என்று எனக்குத் தோன்றவில்லை. எவ்வாறா யினும், பிடிபட்ட அனைவர் மீதும் துரித மாக வழக்குத் தொடுத்து நீதிமன்றத் தீர்ப்பை ஏற்பதே முறை. இதில் செய்யப் படும் காலதாமதம் கண்டனத்துக்குரியது.

● கபில. வேங்கடேசன், சென்னை.

? பாகிஸ்தானின் அணு ஆயுதமற்ற பிராந்தியம் திட்டத்தை வரவேற்கிறீரா?

! ஐ. நா. சபை உத்தரவாதத்துடன் இந்த வட்டாரத்தில் அணு ஆயுதமற்ற பிராந் தியம் உருவாவதை வரவேற்கவே செய் கிறேன். பாகிஸ்தான் தனது அணு ஆயுதத் திறனை வளர்த்துக் கொண்டே அணு ஆயுத மற்ற பிராந்தியம் என்று பேசி வருவதாகச் சிலர் விமர்சிக்கிறார்கள். ஆனால் நாமும் தான் போக்கரானில் அணுகுண்டு (அமை திக்காக!) வெடித்தோம் என்பதை மறக்கக் கூடாது. அணு ஆயுதத் திறன் வளர்வதன் காரணமாகவே அணு ஆயுதமற்ற வட்டாரம் அமைவது அத்தியாவசியமாகிறது.

● ஆர். மோகன், சென்னை.

? கல்கியின் கவர் ஸ்டோரிக்கு முரசொலி மறுப்பு கவனித்தீர்களா?

! ஆகா! மறுப்பு வராமலிருந்தால்தானே அதிசயம்! அதற்காகத் தானே குத்தூசியார் பேனாவைத் தீட்டி வைத்துக் கொண்டு உட் கார்ந்திருக்கிறார். அவர் எண்ணுவது போல் நமக்குக் கலைஞர் பேரில் எவ்வித விரோத மும் இல்லை; ஜெயைக் காக்கா பிடிக்க வேண்டிய அவசியமும் இல்லை. தமிழ் நாட்டுக்கும் தி. மு. க. வுக்கும் எது நல்லது என்று சிந்தித்து எழுதினோம். ஏற்பதும் ஏற்காததும் அவர்கள் இஷ்டம். யாரை விமர்சித்தாலும் கல்கி நல்லெண்ணத்துடன் நண்பனாகத்தான் செயலாற்றுகிறது என் பதைப் புரிந்து கொண்டால், கட்டுரையின் ஒட்டுமொத்தமான கருத்தைப் புரிந்து கொள்வது எளிது. வரி வரியாகப் பிரித்து இல்லாத குற்றம் குறைகளைத் தேடிக் கண்டுபிடிக்க அவசியம் இராது. ஏன், கலைஞரின் அருமை நண்பரான சாவியே தமது பத்திரிகையில் கல்கியின் கவர் ஸ்டோரி கருத்தைத்தானே ஏ. எஸ். ராமன் கட்டுரையாகப் பிரதிபலித்திருக்கிறார்!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
மா. பழனிச்சாமி,
28, ஸ்டேட் பாங்க் சாலை,
கோவை - 641 018.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.

